# 𑌶𑍈𑌵𑌾𑌗𑌮-𑌲𑍇𑌖-𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌮𑍍

## சைவாகம-லேக-ஸர்வஸ்வம்



**INDIAN INSTITUTE OF INDOLOGY**
**1995**

10-1

# 𑌶𑍈𑌵𑌾𑌗𑌮-𑌲𑍇𑌖-𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌵𑌮𑍍

## சைவாகம–லேக–ஸர்வஸ்வம்

## 1995




பதிப்பாசிரியர்

S. அருணசுந்தரம்







இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் இந்தோலஜி
84, கலாக்ஷேத்ரா ரோடு
சென்னை 600 041

Rs - 15

10-1

உ
சிவமயம்

# ஆசியுரை

## சைவாகம லேக ஸர்வஸ்வம்

(சைவ ஆகமக் கட்டுரைக் களஞ்சியம்)

சென்ற 1995 ஆம் ஆண்டு சைவ ஆகமக் கருத்தரங்கு களில் விவாதித்து முடிவெடுக்கப்பெற்ற விஷயங்கள் காலப்போக்கில் காற்றோடு காற்றாகக் கரைந்து போய்விடாமல் ஆவணமாக ஏடாகப் பதிவு செய்யப் பெற்றுள்ளன. அவை **சைவாகம லேக ஸர்வஸ்வம் 1995** என்ற பெயரில் நூல் வடிவம் பெற்று வெளியிடப் பெறுகின்றன. இந்தக் கட்டுரைக் களஞ்சியத்திற்கு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கருத்துரை அரங்குகளில் கருத்துக்களை வழங்கிய ஆகம விற்பன்னர்களையும் தொகுத்தளித்துள்ள முயற்சியாளர் களையும் பாராட்டுகிறோம்.

நமது பயனுள்ள இப்பணி நாளும் வளர திருநிலை அம்மன் உடனாய கொற்றவாளீஸ்வரரை வழுத்துகிறோம். இதுபோல ஆண்டுதோறும் இப்பணி தொடரவும் இறைஞ்சுகிறோம்.

**நாச்சியப்ப ஞானதேசிக ஸ்வாமிகள்**
*ஆதீனகர்த்தா*
கோவிலூர் ஆதீனம்

ஸ்ரீகுருப்யோ நம:

# முகவுரை

வேதங்களும், ஆகமங்களும் நம் பாரத தேசத்தின் பொக்கிஷங்கள். 'வேதோ ரக்ஷதி ரக்ஷித:' என்றபடி வைதிக ஆசாரங்களைக் கடைப்பிடிக்கும் வரை தேச சுபிக்ஷத்திற்கு குறைவிருக்காது. தேசத்தில் துர்பிக்ஷம் ஏற்பட்டால், அது வைதிக தர்மங்கள் குறைந்துள்ளதைக் காட்டும். அந்த நிலை இன்று ஏற்பட்டுள்ளது. எனவே, ஸநாதன முறையைப் பின்பற்றும் அனைவரும், அவரவர்களின் தர்மங்களில் செம்மையாக ஈடுபட வழி–வகுக்கும் வகையில், Indian Institute of Indology என்ற இந்நிறுவனம் **ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதிகள்** முன்னிலையில் தொடங்கப்பட்டது.

இந்நிறுவனத்தின் காரணகர்த்தாவாகிய தவத்திரு **ஸ்ரீ-ல-ஸ்ரீ நாச்சியப்ப ஞானதேசிக ஸ்வாமிகள்,** கோவிலூர் ஆதீனம், அவர்களின் விருப்பப்படி, சென்ற வருடம் சைவாகம ஸதஸ் நடைபெற்று, அதன் சில கட்டுரைகள் 'சைவாகம–லேக–ஸர்வஸ்வம்' 1995 (சைவாகமக் கட்டுரைக் களஞ்சியம் 1995) என்ற பெயரில், இவ்வருடம் (மார்ச் 3, 4, 5, 6 – 1996) நடைபெறும் சதஸ்ஸில் வெளியிடப்படுகிறது.

'க்ரந்த லிபியை நடைமுறைப்படுத்த வேண்டும்' என்ற ஸ்ரீகாஞ்சி பரமாசார்யாளின் ஆஜ்ஞைப்படி, இந்நிறுவனத்தின் பதிப்புகளில் க்ரந்தலிபி அவசியம் இருக்கும். அதன்படி, கட்டுரைகளில் வந்துள்ள வடமொழி வாக்கியங்களை, அந்தந்தக் கட்டுரைகளின் முடிவில் 'வசந–விவரணம்' என்ற பெயரில் கொடுத்துள்ளோம்.

இந்தப் புத்தகத்தைப் பதிப்பிக்க எனக்கு உறுதுணையாக இருந்த எனது ஆசார்யர் **சிவஸ்ரீ K.A. ஸபாரத்ன சிவாச்சாரியார்** மற்றும் எனது குருவாகிய **சிவஸ்ரீ V. சோமசேகர சிவாச்சாரியார்** ஆகியவர்களுக்கு ஸாஷ்டாங்க நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதில் உள்ள க்ரந்த வாக்கியங்களை ச்ரமம் பாராமல் வெகுவிரையில் எழுதித்தந்த **சிவஸ்ரீ B. ஸர்வேச்வர சிவம்** அவர்களுக்கும், அதற்கு உறுதுணையாக நின்றும், அட்டையில் உள்ள தக்ஷிணாமூர்த்தியை மிக அழகாக வரைந்து கொடுத்தும் உதவிய, **ஓவியர் ம.செ. சகோதரர்களுக்கும்** நிறுவனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ப்ரமாணங்களைப் பார்ப்பதிலும், பிழை திருத்துவதிலும் மிகவும் உதவிய **ப்ரம்ஹஸ்ரீ R. சுப்ரமண்ய சர்மா,** பாண்டி, **ஸ்ரீ M. ரகு, சிவஸ்ரீ S. கபாலி வைத்யநாதன்** ஆகியோர்களுக்கும், உதவி புரிந்த பிறருக்கும், மனமார்ந்த க்ருதஜ்ஞதையை தெரிவித்துக் கொள்கிறேன்.

குறுகிய காலத்தில் மிக அருமையாகப் பதிப்பித்து, குறிப்பிட்டபடியே புத்தகம் வெளிவர உதவிய **கம்ப்யூபிரிண்ட்** அச்சகத்தார்கள் நன்றிக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்கள்.

சிவாகமங்களைப் பாதுகாக்க இவ்வாறு பலவகையில் உதவி செய்துவரும் **ஸ்ரீ-ல-ஸ்ரீ மடாதிபதிகள்** (கோவிலூர் ஆதீனம்) அவர்களுக்கு சைவ உலகம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளது. அவர்களது அனைத்து எண்ணங்களும் நிறைவேற எம்பெருமான் ஸ்ரீகற்பகாம்பாள் உடனுறை ஸ்ரீ கபாலீசப் பெருமானை ப்ரார்த்திக்கின்றேன்.

*நன்றி*

*27.2.1996*
சென்னை

**சிவஸ்ரீ S. அருணசுந்தரம் (சேகர்)**
*ஒருங்கிணைப்பாளர்*

# பொருளடக்கம்

# ஸௌரமானமும்*, சாந்திரமானமும்

*கண்டமங்கலம் சிவஸ்ரீ M. சுந்தர குருக்கள்*

ஆதிமத்யாந்த ரஹிதனான பரமேச்வரனின் பஞ்ச க்ருத்யங்களால் உலகம் செயல்பட்டு வருகின்றது. உலகத்தை சிருஷ்டிப்பதற்கு முன் தன்னிடம் லயமடைந்து சூக்ஷ்மமாக இருக்கின்ற வேதாகமங்களை உபதேசித்தார். "வேதாகமெள..."[1] என்ற வசனத்திலிருந்து முன் சொன்ன கருத்து தெளிவாகிறது. அவற்றுள் ஆகமங்களில் கர்ஷணாதி பிரதிஷ்டைகளும், ராஜ்ய நிர்மாணங்களும், நகர நிர்மாணங்களும், கிராம நிர்மாணங்களும், மேலும், மனுஷ்ய கோடிகள் பஞ்ச பஞ்ச உஷக்காலத்தில் எழுந்தது முதல் செய்ய வேண்டிய கார்யங்களும், நன்கு விஸ்தாரமாகக் கூறப்பட்டுள்ளன.

## ஒன்பது மானங்கள்

இந்த ஒவ்வொரு கார்யங்களுக்கும் ஜ்யோதிஷமானது முக்யமானதாக உள்ளது. இந்த ஜ்யோதிஷ சாஸ்த்ரத்தில் மானங்கள் ஒன்பது விதமாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை "ப்ராஹ்மம்..."[2] என்ற ச்லோகத்திலிருந்து அறியப்படும். அதாவது மானம் என்பது – 1. ப்ராஹ்மம், 2. தைவம், 3. பித்ரியம், 4. ப்ராஜாபத்யம், 5. பார்கஸ்பத்யம், 6. ஸௌரம், 7. சாவனம், 8. சாந்த்ரம், 9. ஆர்க்ஷம் என சூர்ய சித்தாந்த† மானாத்யாயத்தில் ஒன்பது வகையாகச் சொல்லப் பட்டுள்ளது. இதில் செளரம் முதலான நான்கு மானங்களின் உபயோகங்கள் "ஸௌரேண..."[3] என்ற ச்லோகங்களி லிருந்து புலப்படும்.

* மானம் என்பது இங்கு கால அளவைக் குறிக்கும்.

† சூர்ய சித்தாந்தம் என்பது ஜோதிட நூல் ஆகும்.

## ஸௌரமானம்

பகல் இரவுகளின் மானம், @ஷடசீதி புண்யகாலங்கள், அயனங்கள்#, விஷுவங்கள்§, சங்க்ராந்தி‡ முதலிய புண்ய காலங்கள், திதிகள், கரணங்கள் இவைகளையும், விவாஹம், க்ஷௌரம், பர்வாக்களில் செய்ய வேண்டிய கார்யங்கள், இவைகளையும் சௌரமானத்தினாலே செய்ய வேண்டும்.

## சாந்த்ரமானம்

விரதங்கள், உபவாஸங்கள், யாத்திரை முதலிய கார்யங்களை சாந்திர மானத்தினாலே செய்ய வேண்டும். பர்வங்களின் கடைசி பாகத்தில் வருகின்ற நக்ஷத்திரத்தைக் கொண்டு மாதங்களைக் கொள்ள வேண்டும்.

## சாவன–மானம்

யாகங்கள் செய்வதற்குரிய காலங்களை விதிப்பது சாவனமானமாகும். இதே மானத்தினாலேயே சூதகாதி காலங்களை நிச்சயித்துக் கொள்ள வேண்டும். தினம் – மாஸம் – வருஷ தேவதைகள் இவைகளையும் நிச்சயித்துக் கொள்ள வேண்டும்.

## நடைமுறையில் மானங்கள்

''விந்த்யஸ்ய ...''[4] என்ற வாக்கியம், விந்தியமலைக்கு வடக்கே உள்ள தேசங்களில், பார்ஹஸ்பத்ய மானத்தினாலும், விந்திய மலைக்கு தெற்கே உள்ள தேசங்களில் சாந்திர மானத்தாலும், அதிலும் திராவிட தேசத்தில் சௌரமானத்தாலும் கால அளவுகளைக் கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. '

@ பித்ருக்களுக்குரிய விசேஷ காலங்கள். ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி ஆகிய மாதப் பிறப்புகள்.

\# தை மாதப் பிறப்பு = உத்தராயண புண்யகாலம், ஆடி மாதப் பிறப்பு = தக்ஷிணாயந புண்யகாலம்.

§ சித்திரை மாதப் பிறப்பு, ஐப்பசி மாதப் பிறப்பு.

‡ தமிழ் மாதப் பிறப்புகள்

## மான லக்ஷணம்

'ரவே: ...''[5] என்ற வாக்கியப்படி மேஷ ராசி முதலான ராசிகளில் சூர்யன் சஞ்சரிப்பதன் காலம் ''ஸௌரமானம்'' எனப்படும். ''ப்ரதமாதினமாரப்ய...''[6] என்ற வாக்கியப்படி சுக்ல பிரதமை முதல் அடுத்த சுக்லப் பிரதமை வரை முப்பது நாள் ''சாந்திரமானம்'' ஆகும். இவ்வாறு காரணாகமத்தில் – சாந்திரமானம், சௌரமானம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

## ஆலயங்களுக்குரிய மானங்கள்

ஆலயங்களில் ஆகம விதிப்படி சௌரமானம், சாந்திரமானம் இரண்டுமே அனுஷ்டிக்கப்படுகின்றன. அதை ''அயநே...[7]'' என்னும் ச்லோகத்தில் விளக்குகிறார். அதன் பொருள் என்னவென்றால், தக்ஷிணாயநத்தில் சௌரமானப்படி உத்ஸவம் செய்யக் கூடாது. உத்தராயணத்தில், சாந்திரமானப்படி உத்ஸவம் செய்யக் கூடாது. இருந்தாலும், தக்ஷிணாயனத்தில் மூன்று விதமான உத்ஸவங்களை மட்டும் சௌரமானப்படி செய்ய வேண்டும் என ஆகமம் கூறுகிறது. உதாஹரணங்களைப் பார்ப்போம்.

## சிவராத்ரி நிர்ணயம்

முதலில் சௌரமானப்படி நடத்துகின்ற உத்ஸவங்களை எடுத்துக் கொண்டோமேயாகில் சிவராத்ரியைக் கணக்கிடும் பொழுது, ஆவணி மாதம் ரோஹிணியோடு கூடிய கிருஷ்ணாஷ்டமியிலிருந்து 184–வது நாள் ''மஹா சிவராத்ரி'' என ''ஸிம்ஹே...[8]'' என்ற வாக்கியங்கள் குறிப்பிடுகின்றன. ''மாகபால்குனயோ: ...[9]'' என்ற ச்லோகம் ''மாசி மாதத்தில் மாகம், பால்குனம் என இரண்டு மாதங்களும் வரும். இப்படி வரும்போது சூர்யன் கும்பராசியில் இருக்கும்போது, பால்குன மாதத்தில் முன்னதாகச் சொல்லப்பட்ட 184–வது நாளாக வந்தால் மஹா சிவராத்ரி உத்ஸவம் செய்ய வேண்டும்'' என்று கூறுகிறது. சூர்யன் கும்ப ராசிக்குப் போவதற்கு முன், மகர மாசத்தின் முடிவில் இருக்கும் போது, எட்டு ஜாமங்களிலும் சிவனை ஒவ்வொரு யுகத்திலும் பூஜை செய்த குமாரர், விநாயகர், விஷ்ணு, பிரஹ்மா, ரிஷிகள் ஆகியவர்களை

பூஜை செய்ய வேண்டும் என "சிவராத்ரௌ...[10]" எனத் தொடங்கும் ஆகம வசனங்கள் கூறுகின்றன.

## உத்தராயண உத்ஸவங்கள்

இதைப் போல் தை மாசத்தில் – புஷ்ய உத்ஸவமும், மாசி மாதத்தில் – மகோத்ஸவமும், பங்குனி மாதத்தில் – பங்குனி உத்திர உத்ஸவமும், சித்திரை மாதத்தில் சைத்ர உத்ஸவமும், வைகாசி மாதத்தில் – வைகாசீ விசாக உத்ஸவமும், ஆனி மாதத்தில் உத்திர உத்ஸவமும், சௌரமானப்படி நடந்துக் கொண்டு இருக்கிறது. சாஸ்த்ர விதிப்படி நடத்தவும் வேண்டும்.

## தக்ஷிணாயந உத்ஸவங்கள்

இரண்டாவதாக தக்ஷிணாயனத்தில் சாந்திரமானப்படி நடத்துகின்ற உத்ஸவங்களை எடுத்துக் கொண்டோமே யாகில்; ஆடி, ஆவணி, புரட்டாசியில் பவித்ரோத்ஸவமும், அதே தக்ஷிணாயனத்தில் விநாயகர் சதுர்த்தி, நவராத்ரி, ஸ்கந்த சஷ்டி போன்ற உத்ஸவங்களும் சாந்திரமானப்படி கணக்கிடப்பட்டு நடந்து கொண்டு வருகின்றன.

இதில் விசேஷமாக தக்ஷிணாயனத்தில் சாந்திரமான மத்தியில் சௌரமானப்படி துலாஸ்நானம், தீபாவளி, கிருத்திகா தீபம், இம்மூன்று உத்ஸவங்களும் நடந்து கொண்டு இருக்கின்றன.

ஆகையால், ஆலயங்களில் சௌரமானப்படியும், சாந்திரமானப்படியும் உத்ஸவாதி கிரியைகள் நடைபெற்று வருகின்றன. மேலும் இவ்விதிமுறைகளை நன்கு அனுசரித்து, ஆலயங்களில் அனைத்து கிரியைகளையும் செயல்படுத்த வேண்டும்.



𑌸𑌾𑌵𑌨𑌾𑌨𑌿 𑌸𑍍𑌯𑍁𑌰𑍇𑌤𑍇𑌨
𑌯𑌜𑍍𑌞-𑌕𑌾𑌲-𑌵𑌿𑌧𑌿𑌸𑍍𑌤𑍁 𑌤𑍈𑌃 ॥
𑌸𑍂𑌤𑌕𑌾𑌦𑌿-𑌪𑌰𑌿𑌚𑍍𑌛𑍇𑌦𑍋
𑌦𑌿𑌨-𑌮𑌾𑌸𑌾𑌬𑍍𑌦-𑌪𑌾𑌸𑍍𑌤𑌥𑌾 ।
(𑌸𑍂𑌰𑍍𑌯-𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤-𑌮𑌾𑌨𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃, 18,19)

4. 𑌵𑌿𑌨𑍍𑌧𑍍𑌯𑌸𑍍𑌯𑍋𑌤𑍍𑌤𑌰𑍇 𑌭𑌾𑌗𑍇
𑌬𑌾𑌰𑍍𑌹𑌸𑍍𑌪𑌤𑍍𑌯-𑌮𑌾𑌨𑌾𑌬𑍍𑌦𑍋 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌃 ।
𑌦𑌕𑍍𑌷𑌿𑌣-𑌭𑌾𑌗𑍇 𑌤𑍁
𑌸𑍌𑌰𑌮𑌾𑌨𑌾𑌬𑍍𑌦𑍋 𑌗𑍍𑌰𑌾𑌹𑍍𑌯𑌃 ॥

5. 𑌰𑌵𑍇𑌃 𑌮𑍇𑌷𑌾𑌦𑌿-(𑌰𑌾𑌶𑌿)𑌗𑌮𑌨𑌂
𑌸𑍌𑌰𑌮𑌾𑌨𑌮𑌿𑌤𑌿 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ।
((𑌮𑍇𑌷𑌾𑌦𑌿-𑌰𑌾𑌶𑌿-𑌗𑌮𑌨𑌂 𑌸𑍌𑌰𑌮𑌾𑌨𑌂 𑌪𑍍𑌰𑌚𑌕𑍍𑌷𑍍𑌯𑌤𑍇।))
(𑌉𑌤𑍍𑌤𑌰𑌕𑌾𑌰𑌣𑌾𑌗𑌮𑌃 -𑌶𑌿𑌵𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌵𑍍𑌰𑌤
-𑌪𑌟𑌲𑌃- 5)

6. 𑌪𑍍𑌰𑌯𑍋𑌗𑌾 𑌦𑌿𑌨𑌮𑌾𑌸𑌸𑍍𑌯
𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌸𑌾𑌧𑌿𑌕𑌂 𑌤𑍍𑌯𑌜𑍇𑌤𑍍 ।
𑌤𑍍𑌰𑌿𑌂𑌶𑌦𑍍𑌦𑌿𑌨 𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌖𑍍𑌯𑌾𑌤
𑌚𑌾𑌨𑍍𑌦𑍍𑌰-𑌮𑌾𑌸𑌮𑌿𑌹𑍋𑌚𑍍𑌯𑌤𑍇 ॥
(𑌉𑌤𑍍𑌤𑌰𑌕𑌾𑌰𑌣𑌾𑌗𑌮𑌃- 𑌶𑌿𑌵𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌵𑍍𑌰𑌤
-𑌪𑌟𑌲𑌃- 4)

7. 𑌅𑌯𑌨𑍇 𑌦𑌕𑍍𑌷𑌿𑌣𑍇 𑌦𑍇𑌶𑌂
𑌸𑍌𑌰-𑌮𑌾𑌨𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 ।

10. 𑌶𑌿𑌵-𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌪𑍂𑌜𑌯𑍇𑌚𑍍𑌚𑍈𑌵𑌂
𑌸𑌰𑍍𑌵-𑌸𑌂𑌪𑌤𑍍-𑌸𑍁𑌖-𑌪𑍍𑌰𑌦𑌾𑌮𑍍 ॥
𑌕𑍃𑌤𑍇 𑌤𑍍𑌰𑍇𑌤𑌾-𑌯𑍁𑌗𑍇 𑌚𑍈𑌵
𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇 𑌚 𑌕𑌲𑍀𑌯𑍁𑌗𑍇 ।
𑌤𑌥𑌾 𑌕𑍃𑌤𑍇 𑌶𑌿𑌵-𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌂
𑌭𑌕𑍍𑌤𑌾𑌃 𑌪𑍂𑌜𑌯𑌨𑍍𑌤𑌿 𑌤𑌥𑌾 ॥
𑌤𑍍𑌰𑍇𑌤𑌾𑌯𑌾𑌞𑍍𑌚𑍈𑌵 𑌵𑌿𑌘𑍍𑌨𑍇𑌶𑌂
𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌂 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌕𑌲𑍌 𑌯𑍁𑌗𑍇 𑌋𑌷𑌿𑌃 𑌪𑍂𑌜𑍍𑌯𑍋
𑌧𑌾𑌤𑌾𑌰𑌂 𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍𑌤𑌤𑌃 ॥
𑌰𑌵𑍌 𑌕𑍃𑌷𑍍𑌣-𑌰𑌤𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂
𑌏𑌕𑌾𑌰𑌸𑍍𑌤𑍈 𑌪𑍍𑌰𑌪𑍂𑌜𑌯𑍇𑌤𑍍 ।
𑌸𑌙𑍍𑌗𑍍𑌰𑌹𑍇𑌣 𑌸𑌹𑌸𑍍𑌰𑌂 𑌚
𑌯𑌾𑌮𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 ॥

(-𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌰𑌣𑌾𑌗𑌮𑌃-𑌶𑌿𑌵𑌰𑌾𑌤𑍍𑌰𑌿𑌪𑍂𑌜𑌾𑌵𑌿𑌧𑌿-
-𑌪𑌟𑌲𑌃 - 9-12.)

# சிவலிங்க வழிபாடு

*சிவஸ்ரீ K.A. சபாரத்ன சிவாச்சாரியார்*

சதுர்வித புருஷார்த்தங்களையும்† யாவரும் அடைவதற்கு சிவபூஜையே சுலபமான வழி எனச் சிவாகமங்கள் சொல்கின்றன. அதை 'பூஜயா விபுலம்...[1]' என்ற வாக்கியங்களிலிருந்து உணரலாம்.

## இருவித பூஜைகள்

'யஜநம் த்விவிதம்...[2]' என்றபடி பூஜை இரண்டுவிதம். அவை வெளியில் பூஜிப்பது, உள்ளே பூஜிப்பது என்பன. அதிலும் முதலில் அந்தர்யாகம்* என்பதைச் செய்து, பின்புதான் பாஹ்ய பூஜையைச் (பஹிர்யாகம்@) செய்ய வேண்டும். இதை 'அந்தர்யாகம்...[3]' என்ற வாக்கியங்களிலிருந்து உணரலாம். அதாவது நம் இதயத்தின் உள்ளே யாதொரு ஜ்யோதி–ஸ்வரூபமான லிங்கம் உள்ளதோ, அதையே நாம் வெளியில் பூஜிக்கிறோம்' என்பதே அதன் பொருள்.

## ஹ்ருதய ஸ்வரூபம்

நம் இதயம் எவ்வாறு உள்ளது? அதில் சதாசிவன் எவ்வாறு வீற்றிருக்கிறார்? என்பதை ''கதலீபுஷ்ப...[4]'' என்ற ச்லோகம் நன்கு விளக்குகிறது. அதன் பொருளாவது – ''அனைத்து ஜீவராசிகளின் இதயமும் வாழைப்பூவை ஒத்து உள்ளது. அதன் நடுவே, #கர்ணிகை மற்றும் எட்டு இதழ்களுடன் கூடிய ஒரு தாமரை உள்ளது. ஒரு சாண் அளவில் இதயம், அதில் 4 அங்குலத்தில் தாமரை, அதில்

† தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்பன.
* மனதிற்குள் பூஜித்தல் அந்தர்யாகம்
@ வெளியில் பூஜித்தல் பஹிர்யாகம்
# தாமரையின் நடுவே மஞ்சளாய் தடியாக உள்ளது கர்ணிகை.

கட்டைவிரல் கணு அளவில் §கேஸரங்களுடன் கூடிய கர்ணிகை. இவ்வாறு உள்ள கர்ணிகையில் சூரியனும், அதன் நடுவில் சந்திரனும், அதன் நடுவில் அக்னியும், அதன் நடுவில் மஹேச்வரனும், அதற்கு மேல் சதாசிவனும், அதற்கும் மேலே சிவனும் உள்ளார்'' என்பதாம்.

## சதாசிவ–லக்ஷணம்

சதாசிவன் என்றால் யார்? எனில் 'ஹம்ஸ–ஹம்ஸேதி...[5]' என்ற வசநமே ப்ரமாணம். அதாவது, அனைத்து ஜீவராசி களின் உடம்பின்கண்உள்ள நாதமே‡ ஹம்ஸம் ஆகும். அதுவே சதாசிவனாம்.

## சிவலிங்கம் – ஒலி–ஒளி வடிவம்

மேலே குறிப்பிட்ட நாதம், தீப ஜ்வாலையின் உருவம் கொண்டது. அதை நிச்வாச காரிகையில், 'ச்ரவணாங் குஷ்ட...[6]' என்று கூறுவதைக் காணலாம். சிவபூஜா ஸ்தவத்தில் ஜ்ஞான சம்பு சிவாசார்யரும் 'ஹ்ருத்பத்ம...[7]' எனும் ச்லோகத்தில் அந்தர்யாகத்தை விளக்கும் பொழுது இதையும் நன்கு விளக்குகிறார். அதன் பொருளாவது : இதயத் தாமரை என்பது சிவாலயம் போன்றது. அதை மனதால் உருவாக்க வேண்டும். அத்தாமரையின் கர்ணிகையானது, சிவலிங்கத்தின் (க்ரியா) பீடம் போன்று உள்ளது. அதில் ஜ்ஞானமயமான நாதவடிவான லிங்கத்தை தூயமனதால் இருத்தி, அதை வழிந்தோடும் அமுதத்தால்¤ நீராட்டி, வைராக்யம் (பற்றின்மை) என்ற சந்தனமிட்டு, அஹிம்ஸை◊ முதலிய எட்டுவித குணங்களாகிய மலர்களால் அர்ச்சித்து, *ப்ராணாயாமம் என்ற தூபம் காட்டி, ஜ்ஞான மாகிய தீபத்தை ஏற்றி, இந்திரியங்களை வெளியில் செல்ல விடாமல் உள்ளிழுத்து, அவைகளையே நிவேதனமாக்கி, சுழுமுனையில் ப்ராணத்தின் போக்குவரத்தையே ஜபமென

§ கர்ணிகையைச் சுற்றியுள்ள சடை.
‡ ஒலி
¤ தலையின் மேற்புறத்திலிருந்து அமுதம் வழிந்தோடுவதாக மரபு.
◊ கொல்லாமை, புலனடக்கம், பொறுமை, அன்பு, அறிவு, தவம், உண்மை, தூய எண்ணம் ஆகியவை 8 குணங்கள்.
* மூச்சை அடக்குதல்

சமர்ப்பித்துப் பூஜையைச் செய்தல் வேண்டும். இவ்விடம் சிவலிங்கத்தை ஒலி ஒளிவடிவாய் கூறியதை கவனிக்க வேண்டும்.

மேலும், 'ஜ்ஞாந–ஜ்யோதிர்மயம்...[8]' எனத் தொடங்கி வாதுளாகமமும் இறைவன் ஜ்யோதிர்லிங்க வடிவாய் இருப்பதை உணர்த்தும். அதன் பொருளாவது "ஞானச்சுடர் வடிவாய் சரத்கால@த்துச் சந்திரன் போன்று உள்ள லிங்கத்தை புருவமத்தியில் நிலைநிறுத்தி, மனதையும் ப்ராணனையும் அர்ப்பணித்து, தன்மயமாகி, மனதை சூன்யமாகச் செய்ய வேண்டும். எண்ணங்கள் தொலையும் பொழுது ஞானானந்தம் வெளிப்படும். இதுவே சமாதி" என்பதாம்.

சிவனைப் பூஜை செய்ய, இருப்பிடங்களாக, ஆத்மா, குருமூர்த்தி, அக்னி, ஜலம், *ஸ்தண்டிலம் முதலியவை களைச் சொல்லி 'யஜநம்...[9]' என்ற வசநத்தால் லிங்கமே சிறந்த இருப்பிடம் எனக் கூறுகிறார்.

லிங்கம் என்றால் என்ன? சிவம் என்பது ஞான சக்தி. ஞான சக்தியே லிங்காகாரமாய்த் தோன்றியது. "அத பத்யு: ...[10]' என மதங்கபாரமேச்வர வசநத்திலிருந்தும், 'ஜ்ஞான சக்தி...[11]' என வருண பத்ததியிலிருந்தும் இதை உணரலாம்.

எனவே, சிவபூஜைக்கு சிறந்த ஆதாரமாய் அமைந்த லிங்கம் என்பது ஒலி–ஒளி மயம் என்பது திண்ணம்.

## "லிங்கம்" (சொல் விளக்கம்)

'லிகி – சித்ரீகரணே[12]' என்பது மூலவினைச் சொல். அதிலிருந்து லிங்கம் எனும் சொல் உண்டாயிற்று. விசித்திர மான உயிர்களும், #தனு–கரண–புவன–போகங்களும் ஒடுங்குவதற்கும் வெளிப்படுவதற்கும் காரணமாய் இருக்கும் நாதரூப ப்ரணவமே லிங்கம் எனத் தெளிவாகிறது.

@ சரத்காலம் – ஐப்பசி, கார்த்திகை மாதங்கள்.
* புனிதமாக்கப்பட்ட, இறைவன் எழுந்தருளும் இடங்கள்.
# தனு – உடம்பு, கரணம் – இந்த்ரியாதி உபகரணங்கள், புவனம் – உலகம், போகம் – அனுபவித்தல்.

## ப்ரணவப் பொருள்

'ப்ரகர்ஷேண நவோ நவோ பவதி (அயம் லோக:) யஸ்மாத்'[13] என்பது ப்ரணவ சப்தத்தின் விரிவாக்கம். அதாவது, இவ்வுலகம் எங்கிருந்து புதிது புதிதாகத் தோன்றுமோ அதுவே ப்ரணவமாம். எனவேதான் அஜிதாகமத்தில் "லயம் கச்சந்தி...[14]" என்று கூறுகிறார். சிவபுராணத்திலேயும் 'சிவோ வா...[15]' என, சிவன் §வாச்யம் என்றும், ப்ரணவம் ‡வாசகம் என்றும், இரண்டுமே ஒன்று என்றும் கூறப்பட்டுள்ளது. ஸ்ரீருத்ரத்திலேயும், இறைவன் ஓசை வடிவாயும் எதிரொலி வடிவாயும் உள்ளார் என்பது "நம: ச்ரவாயச...[16]" என்று கூறப்பட்டுள்ளது.

## சர்வாதாரம் சிவலிங்கம்

எண்பத்து நான்கு லக்ஷம் ¤யோநி பேதத்தில் 'புநரபி ஜநநம்...[17]' என்று இறந்தும் பிறந்தும் உழலும் உயிர்கள் ◊சூக்ஷ்ம சரீரத்துடன் ஓய்வு பெற்றுய்யுமிடமே லிங்கமாகும். ஆகாயத்தில் மின்னொளி போல எங்கும் ப்ரகாசமானதும், உற்பத்தி–விநாச சூன்யமானதும், †சைதன்ய குணமுடைய தும், ஜோதி வடிவானதுமான எந்த தர்மமுண்டோ, அந்த தர்மத்தின் உருவமாய், தர்மியாய் உள்ளதே லிங்காகாரமான சதாசிவன் என்பதை 'சிவஸ்ய தத்வம்...[18]' என்ற ச்லோகத்திலிருந்து உணரலாம்.

## பஞ்ச க்ருத்யம்

சதாசிவன் நிஷ்களமாய் = உருவமற்று இருப்பதால், உலகை எவ்வாறு படைக்க இயலும்? எனில், சதாசிவனின் சிற்சக்தியே படைத்தல் முதலியதைச் செய்கிறதாம். சிவம், அறிய வேண்டியவைகளை ஞானசக்தியைக் கொண்டு அறிந்து, க்ரியாசக்தியைக் கொண்டு காரியம் செய்கிறது.

§ வாச்யம் = சொல்லால் சுட்டிக்காட்டப்படுகின்ற பொருள்.
‡ வாசகம் = பொருளைச் சுட்டிக் காட்டும் சொல்.
¤ யோநி = பிறப்பின் காரணம்
◊ சூக்ஷ்ம சரீரம் = கண்ணுக்குப் புலனாகாத, 8 தத்வங்களால் ஆன புர்யஷ்டகம் என்ற இந்த சரீரம் மோக்ஷம் வரை ஜீவனுடன் இருப்பது.
† சைதன்யம் = உணர்ச்சி

சிவனிடமிருந்து அனைத்து உலகங்களும் தோன்றி, அவனருளாலே நின்று, அவனையே மறுபடியும் அடைகின்றன என்பதை, ''யதோ வா...[19]'' என்ற வேத வாக்கியங்களாலும், ''யதோஜாதா...[20]'' என்ற ஸ்கந்த புராண வசநத்தாலும் அறியலாம்.

ப்ரம்ஹா, விஷ்ணு முதலிய தேவர்கள் கூட ◊பசுக்களே. அவர்களையும் படைத்து, இருக்கும்படிச் செய்கிறார் என்பதை 'ப்ரம்ஹ விஷ்ணு ...[21]' என்ற வசநத்திலிருந்து அறியலாம்.

## சிவலிங்கத்தின் அவசியம்

அஷ்டாங்க யோகங்களில் தாரணை என்று ஒன்று உண்டு. ஏதாவது ஒரு ஆதாரத்தில் மனதைச் செலுத்துவதே தாரணை என்பது. எந்த ஆதாரத்தில் மனதை நிறுத்துவது என்ற பொழுது நிர்விகல்பமான பரமாத்மா ஸதாசிவமே தாரணையில் த்யானிக்கத் தக்கவர். அதாவது சதாசிவ ஸ்வரூபமே லிங்காகாரமாய் உள்ளது.

## சிவலக்ஷணம்

ப்ரம்ஹத்திற்கு மூன்று ரூபம் சொல்லப்படுகிறது. ஒன்று கார்யரூபமாய் ஸர்வோபாதானமான ஸர்வாத்மகமானது. மற்றொன்று ஸ்ருஷ்ட்யாதி க்ருத்யங்களைச் செய்யக்கூடிய புருஷரூபம். இந்த இரண்டுமே அவித்யாத்மகம். மூன்றாவது ஒன்று. அதுவே, பரமான – நிர்குணமான – நிரஞ்சனமான சத்ய–ஞானாநந்த லக்ஷணமுடையது என்று வேதாகமங்கள் சொல்கின்றன.

அம்மாதிரியாய் உள்ள ஒரு வஸ்துவை லிங்கமென்ற பதார்த்தமாய்ச் சொல்லலாம். ''விச்வம் பூதம்...[22]'' என்ற வேதவாக்கியம் 'மூர்த்யஷ்டகம்...[23]' என்ற வசநம் ஆகிய வற்றின் சாரமாய் மேற்கூறிய விஷயங்கள் அமைகின்றன.

## இறைவனின் இரு சரீரங்கள்

யஜுர்வேதம் ருத்ராத்யாயத்தில், 'பரமேச்வரனுக்கு இரண்டு சரீரம். ஒன்று கோரமானது. மற்றது அகோரமான

◊ பசுக்கள் – மலமுடையவை

*சிவா தனு:' என்று சொல்லி, முதல் அனுவாகத்தில், கோரமான, @ஸம்ஹரணசீலமான, கோர ரூபத்திற்குரிய ஆயுதாதி உபகரணங்களை வணங்கிப், பின்பு எட்டாவது அனுவாகத்தில் பரமேச்வரனின் விச்வரூபத்தைத் துதித்து, நமஸ்கரிக்கின்றது. இங்கு பரமாத்மாவுக்கு #அதிஷ்டானம் எது? என்று அறியாமல் ஸர்வ §சராசரமும் அதிஷ்டானம் என்று சொல்லி நமஸ்கரித்ததால், விச்வரூபமாக சிவலிங்கமே ஆகிறது.

பின்னும், உலகில் உள்ள ஜீவராசிகளை உலகிலிருந்து மீளச் செய்கிறான் என்பதை 'நம: தாராய ...[24]' என்ற வாக்யத்தால் அறியலாம். ''தாரயதி...[25]'' என்பதாக அதன் ஸமாஸமாம்.

## சிவனே சரண்யன்

''நம: சிவாய ச[26]'' போன்ற வாக்கியங்கள் அவன் ஒருவனே முழுமையான மங்களங்களை அளிக்க வல்லவன். யாராலும் அறியப்பெற்றவன் என்பதை விளக்கும்.

மேலும், 'சிவ ஏகோ...[27]' என்ற அதர்வசிகை வாக்கியம், 'சமந்தயதி ...[28]' என்ற மஹாபாரத வாக்கியம், 'ஓமிதி...[29]' என்ற மைத்ராயணோபநிஷத் வாக்யம் ஆகியவற்றிலிருந்து, ''அனைத்து தருமங்களையும் விட்டு சிவன் ஒருவனையே உபாஸிக்க வேண்டும். ப்ரணவ வாசகமாய் இருப்பதால் ப்ரணவத்தைக் கூறினாலேயே அவனைத் துதித்ததாகவும், வணங்கியதாகவும், ஆகும் என்பது தெளிவாகிறது.

எனவே, பரமாத்மாவாகிய சிவனை சிவலிங்க வடிவிலேயே உள்ளும் புறமும் பூஜித்து நற்கதியை அடைவோமாக.

* மங்களத்தை வழங்குவது.
@ அழிக்கும் தன்மை வாய்ந்த
# இருப்பிடம்
§ அசையும் பொருட்களும் அசையாப் பொருட்களும்

வசந விவரணம்

1. பூஜயா விபுலம் ராஜ்யம்
அக்நி-கார்யேண ஸம்பதம் ।
தபஸா பாப-ஸம்ஶுத்திம்
ஜ்ஞாநம் த்யாநேந சாப்யதே ॥
க்ரியாஶைவாவலம்பேந
ய꞉ பூஜயதி பக்தித꞉ ।
ஸ ஶிவஸ்வரூபஸ்து யஜ்வா
ஜீவந்முக்தஸ்ஸ உச்யதே ॥
(க்ரியா-பூஜா-லக்ஷண-ஸங்க்ரஹ꞉ ப்ருஷ்டம் -172)

2. யஜநம் த்விவிதம் ப்ரோக்தம்
பாஹ்யாப்யந்தர-பேதத꞉ ।

3. அந்தர்யாகம் புரா க்ருத்வா
பாஹ்யபூஜாம் ஸமாசரேத் ।
ஜ்யோதிர்லிங்கம் ஹ்ருதிஸ்தம் யத்
தஸ்யைவாப்யர்ச்யதே பஹி꞉ ॥
ஶிவ-ப்ரதிஷ்டாவிதி꞉, ப்ருஷ்டம். 133

4. பத்ம-கோஶ-ஸங்காஶம்
ஹ்ருதயம் ஸர்வ-தேஹிநாம் ।
தஸ்ய மத்யே ஸ்திதம் பத்மம்
அஷ்ட-பத்ரம் ஸகர்ணிகம் ॥

விகஸ்தி-ராத்ரம் ஹ்ருதயம்
கமலம் சந்த்ரஸூர்யயோ: ।
ஸுஷும்ன-வஜ்ர-சித்ராத்ர
கர்ணிகா ஸா ஸகேஸரா ॥
கர்ணிகாயாம் பவேத்து வஹ்னி:
தஸ்ய மத்யே து சந்த்ரமா: ।
சந்த்ர-மத்யே பவேத் ஸூர்ய:
தஸ்ய மத்யே மஹேச்வர: ॥
ஸதாசிவோ மஹேசச்ச
தஸ்யாபி பரதச்சிவ: ।

5. ஹம்ஸ ஹம்ஸேதி யோ ப்ரூயாத்
ஹம்ஸோ நாம ஸதாசிவ: ।
(- உபநி - ந்யாஸ: - ப்ருஷ்டி - 13.)

6. ப்ரவணார்த்த-ஸம்யோகாத்
யச்சப்த: ஸம்ப்ரவர்த்ததே ।
தீப-வஹ்னி-சிவா-ஸூர்யா:
ஸோऽபி தத்ராத-ஸம்ஜ்ஞக: ॥
வர்ணாத்மா வா வாசகாத்மா
ப்ரகாசீக்ருத தத்த்வத: ।
(- நிர்வாண - காரிகா)

14. ஸ்வயம் ப்ரவ்ருத்தி ஹேதூநி
ஸம்ஹாரே நிவ்ருத்தாநி ச ॥
நிவ்ருத்தி ப்ரதிபாதி
விஜ்ஞாசக்திஸ்தேந ஹேதுநா ।
(-ஸூக்திநாதம், 3 பாடம், ஶ்லோ-17-18)

15. ஶிவோ வா ப்ரணவோ ஹ்யேஷ:
ப்ரணவோ வா ஶிவஸ்ம்ருத: ।
வாச்ய-வாசகயோர் பேத:
நாத்யந்தம் வித்யதே க்வசித் ॥
(-ஶிவ புராணம் -)

16. 'நம: ஶ்ரவாய ச ப்ரதிஶ்ரவாய ச'
(ருத்ர-ந்யாஸ:-ரு- 66)

/

17. 'ஶப்தமபி ஜநயதி, ஶப்தமபி ஶ்ருணோதி'
ஸ்பந்த-ஸூத்ர-ரத்நாகரே ஶப்தே-
(-பஞ்ஜிகா ஸூத்ரம்-ஶ்லோ-8)

18. ஶிவஸ்ய தச்சக்தித்வம்
ஶக்திரேவ ஸதாஶிவ: ।
தயோர்யோகேந யத்தத்வம்
தத்த்வம் ஶாம்பவமுச்யதே ॥

ஸததம் சைவ ஸாவகாசாத்

ஸாதாவ்ருத்திர் கத்யதே।

ஸர்வேஷாம் த்யாந-பூஜாத்யம்

நிஷ்கலம் ஸகலம் பவேத் ॥

19. யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே।

யேந ஜாதாநி ஜீவந்தி।

யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி।

தத்விஜிஜ்ஞாஸஸ்வ।

(தைத்திரீயோபநிஷத் - ப்ருகுவல்லீ-1)

20. யதோ ஜாதா இமே யேந

ஜாதா ஜீவந்தி ஜந்தவ: ।

யஸ்மிந் வ்ரஜந்தி விலயம்

யஸ்த் ந: தந்த்ரே ஸூத்ரிதே ॥

சந்த்ரார்க்காதி நக்ஷத்ராணி

தஸ்மை தேஜோமயம் நம: ।

(- ஸ்கந்த புராணே)

21. ப்ரஹ்ம-விஷ்ணு-சிவாஸ்சைவ

பச்யந்து ஸ்ருஷ்ட்வா ஈச்வரா: ।

கல்பயித்வா ஸ்திதிம் தேஷாம்

ஸம்ஹரிஷ்யதி காலத: ॥

# தீக்ஷை

*சிவஸ்ரீ K. ராஜப்பா சிவாச்சாரியார்*

அநாதி ருத்ரரான பரமேச்வரர் அநாதியாக உள்ள ஆந்மாக்களுக்கு அநாதியான பாசத்தால் ஏற்பட்ட பசுத்வத்தை நீக்கி, சிவத்வத்தை உண்டாக்க சிவாகமங்களை உபதேசித்தார். சிவாகமங்களில் †த்ரிபதார்த்த லக்ஷணங்கள் உபதேசிக்கப்பட்டுள்ளன. சிவானுபவப் பேற்றையடைய காரணங்களான சர்யை, க்ரியை, யோகம், ஞானம் என்ற நான்கு பாதங்களைக் கொண்டதே சிவாகமங்கள். அவற்றில் தீக்ஷை, ப்ரதிஷ்டை முதலானவை ஆந்மாக்களின் உய்வின் பொருட்டு அருளப்பட்டன. துர்வாசர் முதலிய 18 பத்ததி ஆசார்யர்கள் சிவாகம சித்தாந்தத்தை அடிப்படையாகக் கொண்டு கர்ஷணம், தீக்ஷை, ப்ரதிஷ்டை, உத்ஸவம், ப்ராயச்சித்தம் முதலியவைகளைச் செய்துள்ளனர். அவற்றுள் அகோர சிவாச்சாரியார் பத்ததியும் ஸோமசம்பு சிவாச்சாரியார் பத்ததியுமே ப்ரஸித்தமாக உள்ளன.

இனி, தீக்ஷைகளின் விதானங்கள், பயன்கள், அதிகாரிகள், பேதங்கள் ஆகியவற்றைப் பார்ப்போம்.

### தீக்ஷை

''தீயதே தச்சிவத்வம் ...[1]'' என்ற ச்லோகத்தில் ஸுப்ர பேதாகமம், தீக்ஷை எனும் சொல்லிற்கு விளக்கம் தந்துள்ளது. அதன் பொருளாவது : தீ = சிவத்வத்தை அளித்தல், க்ஷா = பாச நீக்கம் செய்தல் என இருக்ரியைகள் உள்ளதால் அச்சடங்கு தீக்ஷை எனப் பெயர் பெற்றது.

† ''பதி = பரமேஸ்வரன், பசு = ஜீவான்மாக்கள், பாசம் = ஆணவம், கன்மம், மாயை என்று மூன்று'' இவை மூன்றிற்கும் த்ரிபதார்த்த மெனப் பெயர்.

ஆலயங்களில் நடைபெறும் மஹோத்ஸவம் கூட, ஆன்மாக்களுக்கு மலநீக்கம் செய்வதால் தீக்ஷைதான் என்று பூர்வகாரணம், உத்தர காரணம் ஆகிய நூல்கள் கூறுகின்றன. அதாவது மஹோத்ஸவத்தில் இறைவன் மூலம் அனைவரும் சாம்பவீ தீக்ஷையைப் பெறுகிறார்கள்.

''ஆதௌ சதாசிவேனைவ...[2]'' என்ற பூர்வ காரணாகம – வசநத்தால் கௌசிகர் முதலிய ஐந்து ரிஷிகளும் சிவனாலேயே முதற்கண் தீக்ஷிக்கப்பட்டவர்கள் என்பதால் அவர்கள், சிவஸ்ருஷ்டியிலிருந்து வந்த *சாந்தநிகர்கள் என்பது விளங்கும். இவர்களே, ஆன்மாக்கள் நற்கதியை அடையும் பொருட்டு தீக்ஷை, ப்ரதிஷ்டை போன்ற வற்றைத் தெரிந்து, அதன் வழி நின்று லோக குருவாக விளங்குபவர்கள்.

ஆன்மாக்கள் தீக்ஷை மூலம் ஆறு #அத்வாக்களில் (வழி) நின்று §சிவசாயுஜ்யத்தை அடைவர்.

## தீக்ஷிதரின் அதிகாரங்கள்

ப்ரம்ஹ – முகோத்பவ – ப்ராம்ஹணர் முதலிய நான்கு வர்ணத்தாரும் சைவ தீக்ஷையால், நித்யமாகிய ஆத்மார்த்த பூஜை, ஆத்மலிங்கப்ரதிஷ்டை, காம்யாதி சைவ வ்ரதங்கள் ஆகியவைகளை தாம் செய்து கொள்வதற்கும், தத்தம் ஜாதியினருக்கு மாத்ரம் செய்து வைப்பதற்கும் அதிகாரிகள் ஆகிறார்கள்.

வித்து ஒன்றானாலும் நிலத் தன்மையினால் அது மாறுபடுவது போல, மேகஜலம் ஒன்றானாலும், பூமியின் மாற்றத்தால் வேறுபடுவது போல, தீக்ஷை, மந்திரம், உபதேசம் ஆகியவை சிஷ்யனுடைய தகுதிக்கு ஏற்றபடி மாறுபடுகிறது என்பதை ''ஏகம் ச பீஜம்...[3]'' என்ற வசநத்தால் அறியலாம்.

* பரம்பரையினர்

\# மந்த்ரம், பதம், வர்ணம், புவனம், தத்வம், கலை என்ற ஆறும் சிவத்வத்தை அடைய அத்வாக்க –(வழிக–) ளாம். அத்வாக்கள் = வழிகள் ஆகும்.

§ சிவனின் வெகு சமீபத்தில் நிலைத்திருத்தல்

## ஆசார்ய லக்ஷணம்

தீக்ஷையை செய்து வைக்கும் ஆசார்யரின் லக்ஷணங்கள் இனி சிந்திக்கப்படுகின்றன. விரக்தர், நைஷ்டிகர் என்ற இருவரில், விரக்தர் ச்ரேஷ்டர். அடுத்த இடம் நைஷ்டிகருக்கு. பௌதிகர்களில் முதலில் க்ருஹஸ்தர். பின்பு வானப்ரஸ்தர் என இவர்கள் முறையே தீக்ஷை செய்து வைக்கத் தகுதியுடையவர்கள்.

ஆசார்யருக்குரிய அங்க லக்ஷணங்கள், குணங்கள் முதலியவை விரிவாக ஆகமங்களில் கூறப்பட்டுள்ளன. அந்த லக்ஷணங்கள் இல்லை என்றாலும், அறிவால் உயர்ந்து ஞானம் நிறைந்தவன் தகுதியுடையவன் எனக் கூறப்பட்டுள்ளது.

## சிஷ்ய—லக்ஷணம்

சாஸ்த்ரங்களில் நாட்டமும், ப்ரியமும் உடையவன், நீதி—நேர்மையுள்ளவன், நிச்சயபுத்தி உள்ளவன், சேவை மனப்பான்மை உள்ளவன். குருவின் கார்யங்களில் முயற்சியுள்ளவன், குருசேவையை எப்பொழுதும் உல்லங்கனம் இன்றி செய்பவன், பய—பக்தியுள்ளவன் என்று அனைத்துவித நற்குணங்கள் பொருந்திய சிஷ்யனே சிவ—சம்ஸ்காரத்திற்கு யோக்யமானவன்.

## தீக்ஷைக்குகந்த இடங்கள்

புண்ய—க்ஷேத்ரங்கள், புண்ய நதி தீரங்கள், புஷ்பத் தோட்டங்கள், வீடு, தேவாலயம் போன்ற இடங்களில் மண்டபமமைத்து தீக்ஷை செய்யலாம்.

## தீக்ஷா காலம்

ஆலய ரதோத்ஸவம், †தமனோத்ஸவம், ஸங்க்ரமண—விஷு—அயந—புண்ய காலங்கள், சூர்ய—சந்த்ர—க்ரஹணங்

† சித்திரை மாதப் பௌர்ணமி அன்று மருக்கொழுந்தைச் சாற்றி செய்யப்படும் உற்சவம்.

கள், *பவித்ரோத்ஸவ காலம் ஆகிய சமயங்களில் தீக்ஷையைச் செய்யலாம்.

## உரிய நக்ஷத்திரங்கள்

அனுஷம், ஹஸ்தம், சுவாதி, ம்ருகசீர்ஷம், மகம், மூலம், ரேவதி, திருவோணம், திருவாதிரை, பூசம், ரோஹிணீ, உத்திரம், உத்திரட்டாதி, உத்திராடம் ஆகியவை தீக்ஷைக்கு உகந்த நக்ஷத்திரங்கள்.

## உரிய நாட்கள்

செவ்வாய், சனி தவிர பிற நாட்கள் தீக்ஷைக்குச் சிறந்தவை ஆகும்.

## பொருந்தாத காலங்கள்

ச்ராவணம், பாத்ரபதம், புஷ்யம், சைத்ரம்¤, குருமூடம், சுக்ரமூடம், ◊அதிமாஸம் மற்றும் பிற தோஷம் கொண்ட காலங்கள்.

## மண்டப லக்ஷணம்

ரவிஸூத்ரம், மநுஸூத்ரம், கலாஸூத்ரம்@ ஆகிய வற்றுள், ஒரு வகையான மண்டபம் தீக்ஷைக்கு உகந்தது.

## § மண்டல லக்ஷணம்

மண்டபத்தின் நடுவே மண்டலம் அமைக்க வேண்டும். உமாகாந்த மண்டலம், கௌரீலதா மண்டலம், நவநாப மண்டலம் போன்றவற்றுள் ஏதேனும் ஒன்று தீக்ஷைக்கு உகந்தது.

* ஒருவருட கால பூஜைகளில் ஏற்பட்ட குறைகள் நீங்க, செய்யப்படும் உற்சவம்.

¤ இவை நான்கும் சாந்த்ரமானப்படியான மாதங்கள்

◊ சாந்த்ரமானப்படி ஒரு வருடத்திற்குள் அதிகமாக வரக்கூடிய மாதம் அதிமாஸம்.

@ இவை மூன்றும் முறையே, 12, 14, 16 என்ற கணக்கில் கோடுகளைப் போட்டு அமைக்கப்படும் மண்டப வகைகள்.

§ இறைவனை எழுந்தருளச் செய்ய, வண்ணத் தூள்களால் போடப்படும் கோலம் அல்லது யந்த்ரம் போன்ற வடிவம் கொண்டது.

## தீக்ஷை வகைகள்




என தீக்ஷை ஏழுவகைப்படும். அவற்றின் விவரம் :

**1. நயந தீக்ஷை**

தாய் மீனானது, குட்டி மீன்களைப் பார்த்த உடனேயே குட்டிகளுக்குப் பசி நீங்கிவிடுமாம். அதுபோல, ஆசார்யர், சிவோஹம் பாவணையில், மூலமந்திரத்தைத் தனது கண்களில் ந்யஸித்து, சிஷ்யனை நோக்க, அந்நொடியே பாசங்கள் நீக்கம் பெறுவதே நயந தீக்ஷையாம்.

**2. ஸ்பர்ச தீக்ஷை**

தனது வலது கரத்தை சிவகரமாக்கிக் கொண்டு, அதனால், சிஷ்யனுடைய சிரஸ் முதல் எல்லா அங்கங்களையும் ஸ்பர்சிப்பதாம்.

**3. வாசிக தீக்ஷை**

சிவனுடைய திருநாமங்களை ஜபிக்கும்படி சிஷ்யனைச் செய்தல்.

**4. பாவநா தீக்ஷை**

ஆமையானது, தான் இட்ட முட்டையை, பல காலங்கள் கழித்து, தொலைவில் இருந்தவாறே நினைக்கும். அது நினைத்த மாத்திரமே எங்கோ உள்ள முட்டை பொறியும். அதுபோல, ஆசார்யர், சிவோஹம் பாவணையில் இருந்து கொண்டு மனோவ்யாபாரத்தால் சிஷ்யனை நினைக்க, உடன் அவனுக்கு பாசநீக்கம் ஏற்படுதலே பாவநா தீக்ஷையாகும்.

**5. சாஸ்த்ர தீக்ஷை**

சைவ சாஸ்திரங்களை பிழையற சிஷ்யனுக்கு சொல்லிக் கொடுத்தலே சாஸ்த்ர தீக்ஷையாகும்.

### 6. யோக தீக்ஷை

மூலாதாரம், ஸ்வாதிஷ்டாநம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞா என்று உள்ள ஆறு ஆதாரங்களை, சிஷ்யனுக்குத் தக்கவாறு தர்சநம் செய்து வைத்தலாம்.

### 7. ஹௌத்ரீ தீக்ஷை

குண்ட – மண்டல – *வேதிகைகளுடன் லக்ஷணப்படி க்ரியைகளைச் செய்து, ஸமய தீக்ஷாதிகளைச் செய்து, ஸமயப்ரவேசாதிகளில் அதிகாரம் வழங்குதல்.

## ஸமய தீக்ஷை

லக்ஷணங்களுடன் கூடிய யாகசாலையில் பூஜை – ஹோமங்களைச் செய்து, பின்பு யாகசாலையின் வெளியில் சிஷ்யர்களை நிற்கவைத்து, சிஷ்யனை தலைமுதல் கால்வரை பார்க்க வேண்டும். ஆசார்யனது பார்வையால் ஆத்ம சுத்தி ஏற்படும். இது முதற்கொண்டு அனைத்து சடங்குகளையும் செய்ய, சிஷ்யன் ஸமயதீக்ஷிதனாக 'ஸமயீ' என வழங்கப்படுகிறான்.

'ஸாமான்ய ஸமயீ' என்ற இந்த சிஷ்யன் சிவபூஜைக்குப் பணிவிடை செய்வதில் தகுதியுடையவன் ஆகிறான்.

## விசேஷ தீக்ஷை

'விசேஷ தீக்ஷை' என்பது சிஷ்யனுக்கு விசேஷமான ஸம்ஸ்காரத்தைத் தரவல்லது. இதனால் சிஷ்யன் தனது ஜாதியிலிருந்தும், பாபங்களிலிருந்தும் உத்–த்ருதன் ஆகிறான்.

இந்த தீக்ஷையில், சிஷ்யனின் ஆத்மா, வாகீசீ கர்பத்தில் சேர்க்கப்பட்டு, ருத்ராம்சமாக ஆக்கப்படுகிறது.

இவ்விசேஷ தீக்ஷை ஆனவன், பூஜை செய்து கொள்வது, ஹோமம் செய்து கொள்வது, சிவாகமங்களைப் படிப்பது ஆகியவற்றில் தகுதியுடையவன் ஆகிறான்.

* புனிதமாக்கப்பட்ட மேடை வேதிகை எனப்படும்.

## நிர்வாண தீக்ஷை

நிர்வாண தீக்ஷையானது, லோகதர்மிணீ, சிவதர்மிணீ என இருவகைப்படும். சிகாச்சேதம் இல்லாதது லோகதர்மிணீ ஆகும். சிகாச்சேதத்துடன் கூடியது சிவதர்மிணீ ஆகும்.

பௌதிகர்களுக்கு, அதாவது, போகத்தை விரும்புபவர் களுக்கு, லோகதர்மிணீயில் தீக்ஷையைச் செய்ய வேண்டும். நைஷ்டிகப்ரம்ஹசாரிக்கு சிவதர்மிணீயால் தீக்ஷையைச் செய்ய வேண்டும். மேலும், லோகதர்மிணீயும் ஸபீஜை, நிர்பீஜை என இருவகைப்படும். வைதீக தர்மத்தில் அதிகாரம் உள்ளவர்களுக்கு ஸபீஜையும், அதில் அதிகாரம் அற்றவர்களுக்கும், அந்த சமயாசாரத்தை அனுஷ்டிக்க முடியாதவர்களுக்கும் நிர்பீஜ தீக்ஷை ஆகும்.

சிவதர்மிணீயில் பூர்வஜன்ம புண்யங்கள், பாபங்கள் என்ற இரண்டையும் சோதித்து, ஸத்யோ நிர்வாணமாகச் செய்தால், குருவினுடைய தீவிர தர்சன—நிபாத—விசேஷத் தால் அப்பொழுதே முக்தி கிடைக்கும்.

பாபங்களை மட்டும் சோதித்து, புண்ய கர்மாவை இந்த ஜன்மாவில் அனுபவிக்க விட்டுவிட்டு முடிவில் முக்தியைக் கொடுக்கும் தீக்ஷை அஸத்யோ நிர்வாண தீக்ஷை ஆகும்.

அதன் உட்பிரிவில் ஸாதிகாரை, நிரதிகாரை என இருவிதம்.

தன்னைப் போலவே சிஷ்யனும், ஸகல மக்களுக்கும் தீக்ஷாதி க்ரியைகளைச் செய்து குருவாக இருந்து அனுக்ரஹம் செய்ய வேண்டும் என ஆசார்யர் அதிகாரத்தை அளித்தால் அதுவே ஸாதிகார தீக்ஷை ஆகும். தன்னிடம் தீக்ஷை பெற்ற சிஷ்யன் தன் ஆத்மார்த்த பூஜை, ஜபம், ஆகமபடநம் ஆகியவற்றை மாத்திரம் செய்து கொண்டு, இறைவன் தொண்டினால் கடைசியில் முக்தியை அடைய வழி செய்வதே நிரதிகாரை ஆகும்.

தீக்ஷை ஞானவதீ, க்ரியாவதீ என மேலும் இரண்டு வகைப்படும். குண்ட – மண்டல – வேதிகைகளை அமைத்து, சடங்குகளின் மூலம் தீக்ஷையைச் செய்வது க்ரியாவதீ ஆகும். அனைத்து சாஸ்த்ரங்களிலும் பாரங்கதனான சிஷ்யனுக்கு, குண்ட மண்டலாதிகளை

யோக மார்கத்திலேயே கற்பித்து திவ்ய த்ருஷ்டியினாலேயே தீக்ஷையைச் செய்வது ஞானவதீ ஆகும்.

இந்த நிர்வாண தீக்ஷையில், வாகீச்வரீ–வாகீச்வரர்களின் அருளால், சிஷ்யன், தன் பூர்வ கர்மாவிற்குத் தக்கவாறு அனைத்து புவனங்களுக்கும் சென்று அனுபவிக்க வேண்டிய எல்லாவற்றையும் அனுபவித்து விடுகிறான். ஆகையால் இந்த தீக்ஷையில் சஞ்சிதம் ஆகாமி என்ற இருவினைகளையும் தொலைத்து, சுத்த–அத்வநாக சிஷ்யன் செய்யப்படுகிறான். எனவே பாசங்கள் போன்ற சிகை வெட்டப்படுகிறது. சிவசக்தியின் அருளாலேயே இந்த தீக்ஷை சிவத்வத்தை அளிக்க வல்லதாம்.

## ஆசார்யாபிஷேகம்

மூன்று பதார்த்தங்களையும், நான்கு பாதங்களையும் கொண்டு, போகம், மோக்ஷம் என்ற இரு பலன்களை அளிக்க வல்லதான சிவாகமங்களை, எவன் நன்கு உணர்ந்து உள்ளானோ, அவனே ஆசார்யாபிஷேகத்திற்கு தகுதியுடையவன் ஆவான். இந்த சிஷ்யன் ஸபீஜ தீக்ஷிதனாக இருக்க வேண்டும்.

ஆசார்யாபிஷேத்தைச் செய்து கொண்டவன் பிறருக்கு தீக்ஷை செய்து வைப்பது, ப்ரதிஷ்டை செய்வது போன்ற கார்யங்களில் தகுதி உடையவனாக ஆகிறான்.

தீக்ஷையைச் செய்துவைக்கும் ஆசார்யன், தீக்ஷையைச் செய்து கொள்ளும் சிஷ்யனுக்கு, தன்னிடம் உள்ள பிற சிஷ்யர்களையும், தனது அதிகாரத்தையும் சமர்ப்பணம் செய்து விட்டால் அதுவே அதிகார சமர்ப்பணம் ஆகும்.

இவ்வாறு, சைவாகமங்களில் தீக்ஷை மிகவும் அவசியமாகக் கருதப்படுகிறது.



# சைவாகமங்களில் விரதங்கள்

*பிரம்ஹஸ்ரீ* R. *சுப்ரமண்ய சர்மா*

"வ்ருஞ்" என்னும் தாதுவின் அடியாய் வந்த சொல் "வ்ரதம்" என்பது. புண்ணியத்தைத் தரும் உபவாசம் முதலியவைகளுக்கு "வ்ரதம்" என்று பெயர். நியமம், புண்யகம் என்பவைகளை வ்ரதத்தின் பர்யாயப் பெயர்களாக அமரகோசம்* கூறுகிறது. இச்சொல் உபயலிங்க (இருபால்) பதமாகக் கொள்ளப்பட்டுள்ளது. (காண்க : சப்த கல்பத்ருமம்)

வேதங்களில் விதிக்கப்பெற்ற வ்ரதங்கள், ஸ்ம்ருதிகள் கூறிய வ்ரதங்கள், புராணங்களில் காணப்படும் வ்ரதங்கள் எனப் பல நூறு வ்ரதங்கள் உள்ளன. இவ்வாறே சைவாகமங்களில் விதிக்கப்பெற்ற விரதங்கள் பல இருக்கின்றன.

ஆகம வ்ரதங்களைக் கீழ்க்கண்ட முறையில் வகைப் படுத்தலாம் : சிவ வ்ரதங்கள், சக்தி வ்ரதங்கள், விநாயக வ்ரதங்கள், சுப்ரமண்ய வ்ரதங்கள், க்ரஹ வ்ரதங்கள், நித்ய வ்ரதங்கள், நைமித்திக வ்ரதங்கள், மாத்ரு வ்ரதம், அநங்க வ்ரதம், பூமி வ்ரதம், தேவ வ்ரதம், இராஜ–ராஜேச்வர வ்ரதம், மஹாவ்ரதம், விச்வரூப வ்ரதம், புத்ர வ்ரதம், சர்வகாம வ்ரதம் என. அவற்றுள் சிலவற்றை இங்கு பார்ப்போம்.

## சிவனுக்குரிய வ்ரதங்கள்

சிவனுக்குரிய வ்ரதத்தை நான்கு வகைகளாக ஆகமங்கள் கூறுகின்றன. அவை 1. சோம வ்ரதம், 2. சோமவார வ்ரதம், 3. சிவராத்ரி வ்ரதம், 4. சிவ வ்ரதம் என்பன.

* அமரகோசம் என்ற நூல் அமரஸிம்ஹனால் எழுதப்பட்ட சொற் களஞ்சியம் ஆகும்.

### 1. சோம வ்ரதம்

வைகாசி மாத பௌர்ணமியன்று கிழக்கே சந்திரன் உதிக்கவும், மேற்கே சூரியன் மறையவும் உள்ள வேளையில் தாமிர பாத்திரத்தில் பாலை நிரப்பி, அதில் சுவர்ணத்தை இட்டு, தாமரை மலரால் மூடி, அதையும் இரு வஸ்திரங்களால் மூடி, சந்தன–புஷ்பங்களால் அர்ச்சிக்க வேண்டும். பின்னர் சிவ பக்தனான ப்ராம்ஹணனுக்கு புக்த தக்ஷிணையுடன் போஜனம் செய்வித்து, "ப்ரீயதாம் மே...[1]" என்ற மந்திரத்தைச் சொல்லி சிவத்யானத்துடன் பாத்திரத்தை தானம் செய்ய வேண்டும். இதற்கு சோம வ்ரதம் என்று பெயர். 'சிவலோகத்தை அடைவிப்பதே இதன் பயன்' என சிவதர்மபூர்வம் என்ற உபாகமம் கூறுகிறது. "மேதாவீ ஸுபக: ...[2]" என்ற வாக்கியங்களிலிருந்து மேற்கூறிய விஷயங்கள் புலப்படும்.

### 2. சோமவார வ்ரதம்

தை மாதம் முதல், மார்கழி மாதம் முடிய, எல்லா மாதங்களிலும் உள்ள திங்கட்கிழமைகளில் உபவாசம், சிவபூஜை, இரவு கண்விழித்தல் என வ்ரதானுஷ்டானம் செய்ய வேண்டும். வ்ரத நாட்களில் பூர்வான்ஹத்தில் தர்பணமும், மத்யாந்ஹத்தில் ப்ரதக்ஷிணமும், சாயங் காலத்தில் ஜபமும், இரவில் பூஜையும் செய்ய வேண்டும் என்று "பூர்வாண்ஹே தர்பணம்...[3]" என்ற ச்லோகத்தில் அம்சுமதாகமம் கூறுகிறது.

மேலும், மறுநாள் ப்ராம்ஹண போஜனம், தக்ஷிணா தானம் ஆகியவற்றைச் செய்ய வேண்டும். இந்த வ்ரதமானது செல்வமளிக்கும், வெற்றியைத் தரும், புண்யத்தைத் தரும். நீண்ட ஆயுளைத் தரும்என்று அம்சுமதாகமம் "ஸ்ரீகரம் விஜயம் புண்யம்...[4]" என்ற ச்லோகத்தில் கூறுகிறது.

### 3. சிவராத்ரி வ்ரதம்

அசிந்த்ய விச்வ சாதாக்யம் என்ற உபாகமம், ஸ்வாயம்புவாகமம், உத்தர காரணாகமம், அம்சுமதாகமம், பூர்வகாரணாகமம், விஜயாகமம், சிந்த்யாகமம்,

சந்தானாகமம் என ஆகம நூல்களிலும், நிகம ஞானதேசிகர் எழுதிய ''சிவராத்ரி நிர்ணயம்'' என்ற நூலிலும் சிவராத்ரி வ்ரதம் செய்யும் முறை, திதி நிர்ணயம், ஒரு மாதத்தில் இரு சிவராத்ரிகள் வந்தால் நிர்ணயிக்கும் முறை, கால முறைப்படி அபிஷேக த்ரவ்யங்கள், அர்ச்சிக்கும் மலர்கள், அணிவிக்கும் ஆடை அணிகள், நிவேதிக்கும் நிவேதனங்கள், பாரணை முறைகள் என அனைத்து விஷயங்களும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

### 4. சிவ வ்ரதம்

ஞாயிற்றுக்கிழமை ரேவதீ நக்ஷத்திரம் ஆகியவற்றுடன் அஷ்டமீ திதியோ சதுர்தசீ திதியோ கூடிய நாளில் முறைப் படி சிவபூஜை செய்வது 'சிவ வ்ரதம்' என காலோத்தரம் என்ற உபாகமம், ''ஆதித்ய ரேவதீயோக: ...[5]'' என்ற ச்லோகத்தில் கூறுகிறது.

## சக்திக்குரிய வ்ரதங்கள்

சக்தி வ்ரதமும் கௌரீ வ்ரதம், ஆர்த்ரா வ்ரதம், ஆஷாட பூரவிதி, நவராத்ரி விதி என நான்கு வகையாகக் கூறப்பட்டி ருக்கிறது. அவற்றுள் சிலவற்றைப் பார்ப்போம்.

### 1. கௌரீ வ்ரதம்

சித்திரை மாத சுக்ல பக்ஷ த்ருதீயை திதியில் கௌரீ வ்ரதத்தை அனுஷ்டிக்க வேண்டும். இந்த வ்ரதத்தை அனுஷ்டிப்பதால், பெண்களுக்கு பரம சௌபாக்யம் கிட்டும் என காலோத்தரம் என்ற ஆகமம் ''கௌரீ வ்ரதமதோ வக்ஷ்யே...[6]'' என்ற ச்லோகத்தில் கூறுகிறது.

### 2. ஆர்த்ரா வ்ரதம்

சந்த்ர ஞானாகமத்தில் 'ஆர்த்ரா வ்ரதம்' கூறப்படுகிறது. இது மற்ற ஆகமங்களுக்குச் சற்று மாறுபட்டுள்ளது. இவ் விரதம் எல்லா உயிரினங்களுக்கும் சுகத்தைத் தர வல்லது. மங்களங்களெல்லாம் தரும். பாதுகாப்பையளிக்கும். பகையை அழிக்கும். இவ்விரதம் ஆலயத்தில் நடைபெறும் உற்சவமாகக் காணப்படுகிறதே தவிர, தனிமனிதன் அனுஷ்டிக்கும் விரதமாகக் காணப்படவில்லை. இதனால்

தலைப்பு மட்டும் "ஆர்த்ரா வ்ரதம்" என இருப்பதால் இங்கு விளக்கப்படுகிறது. "ஆர்த்ரா வ்ரதம் ப்ரவக்ஷ் யாமி...[7]" என்ற ப்ரமாணத்தால் கௌரீ உற்சவம் தான் ஆர்த்ரா வ்ரதம் என்பது விளங்கும்.



தஸ்யை விப்ராய தத்தாத்ரம்
ஸுவர்ணயுக்தம் ஸதக்ஷிணம்॥
ஸ்தத்வாத்ரவ்ரதம் நாம க்ருத்வா
ஸாயுஜ்யகம் வ்ரஜேத்॥
-(ஸ்ரீவசநபூ. 8-34-39)

③
பவித்ராணாம் தவத்ரம் கவ்யதாம்
உத்தமாந் ஸர்வக்ஷிணவ்।
ஸ்வாயாணம் ச ஜ்ஞனம் கவ்யதாம்
ஸாத்ருள பலோஜ்ஞானம் ஸமாசரேத்॥

- ஸம்ஸ்கர்ததுர்ம வைப்ணவ வாஸ வ்ரத விதிகி,5

④
ஸ்ரீகரம் விஜயம் புண்யம்
ஜயதாநோமப்ய வப்நமி।
ஸர்வநோமவிநாசாய
ஸர்வைஸ்வர்யப்ரதாயகம்॥

-(ஸம்ஸ்கர்ததுர்ம வைப்ணவ வாஸவ்ரத-
விதி:- 1-2)

⑤
ஜாதிதாநவதீயோமரக்ஷித்ரத்தியாம்
யதா ஹவேது।

உண்வெ ஸவுஸம்யொகெ
ஷ்ணீயும் காரயெத்துராது ।
தநூயெ பூளரீராஷ்ாய
க்ஷுசுவா களத்கவநூநஜி ॥

(– உநூ ஜகாநாமஜஃ )

# ப்ரதோஷம்

*சிவஸ்ரீ A.V. ரவி சுவாமிநாத சிவாச்சாரியார்*

## ப்ரதோஷ காலம்

'ப்ரதோஷம்' என்பதற்கு இராத்திரியின் முன்வேளை என்று பொருள். சூரிய உதயத்திலிருந்து இருபத்தாறேகால் நாழிகைக்கு மேல் (மாலை சுமார் 4.30 மணிக்கு மேல்) மூன்றே முக்கால் நாழிகைக்கு (மாலை சுமார் 6.00 மணி வரை) ப்ரதோஷ காலம் என்று பெயர். இதற்கு மேல் மூன்றே முக்கால் நாழிகை (மாலை சுமார் 6.00 மணி முதல் 7.30 வரை) ரஜநீமுக காலம் எனப்படும்.

'ப்ரதோஷம்' என்றால் 'ப்ரகர்ஷேண தோஷ:[1]'' என்று சப்தார்த்தம் கூறுவார்கள். அதாவது தோஷம் வாய்ந்த = குற்றம் வாய்ந்த காலம் என்று பொருள் கொள்வார்கள். அது இவ்விடத்தில் பொருந்தாது. ''தோஷா[2]'' என்றால் இரவு என்றும் பொருளுண்டு. 'தோஷாயா: ப்ராக் ப்ரதோஷ:[3]'' என்று வ்யுத்பத்தி செய்து, இரவுக்கு முந்தைய அல்லது இரவின் தொடக்கம் என்று பொருள் கொள்ள வேண்டும். *சிசுபால வதத்திலேயும்[4] இது பற்றி குறிப்பு உள்ளது. மேலும், அமர கோசத்தில் ''திவாஹ்நீ...[5]'' என்றும், ''ப்ரதோஷோ ரஜநீமுகம்[6]'' என்றும் கூறியதைக் கருத்தில் கொள்ள வேண்டும். சூரிய அஸ்தமனத்திற்கு முன்னதாக மூன்றே முக்கால் நாழிகையை 'கோதூளிலக்னம்' என்றும், அக்காலத்தில் சுபகாரியங்களைச் செய்யலாம் என்றும் ஜோதிட நூல்கள் குறிக்கின்றன. இதுவும், ப்ரதோஷ காலத்தையே குறிக்கும்.

* 'சிசுபாலவதம்' என்பது மாகன் என்ற கவி இயற்றிய காவியம்.

## ப்ரதோஷத்தில் சிவதர்சனம்

ப்ரதோஷ காலத்தில் சிவதரிசனஞ்செய்வது மிக விசேஷமானதாகும். இக்காலம் இரவின் தொடக்கமாதலால் அகில உலக நாயகனாகிய சிவபெருமான் அனைத்து சராசரங்களையும் தன்வசம் ஒடுக்கிக் கொள்ள ஆனந்த தாண்டவம் புரியும் அற்புதக் காலமாகும். அதாவது, சூரிய உதயத்தில் ஸ்ருஷ்டியையும், பகலில் ஸ்திதியையும், ப்ரதோஷ வேளையில் சம்ஹாரத்தையும் செய்யும் சர்வேஸ்வரன், தமது திரோதான சக்தியால் அகில உலகங்களையும் இருளில் மறைக்கிறார். பரம கருணாநிதியாகிய பெருமானார், அனுக்ரஹிக்கும் முறையில் உயிர்களை அமைதிப் படுத்துகிறார்.

இப்படியாக உதயம் முதல் இரவு வரை, ஐந்தொழில்களைச் செய்யும் சிவபெருமான், முப்பத்து முக்கோடி தேவர்களும், கணங்களும், கந்தர்வர்களும், அசுரர்களும் லயிக்கும் வண்ணம் ஆனந்த நடனம் புரியும் காலமே ப்ரதோஷ காலமாகும். ஆலயங்களில் சாயரக்ஷை பூஜையில் முதலில் நடராஜப் பெருமானையும், பிறகு விநாயகர், மூலலிங்கம், அம்பிகை, சோமாஸ்கந்தர் என்ற முறையிலேயே பூஜிப்பர். இதனை "தாண்டவம்...7" என்ற ச்லோகத்தில் காரணாகமம் கூறும்.

## ப்ரதோஷ வகைகள்

ப்ரதோஷம் ஐந்து வகையாகப் பிரிக்கப்படுகிறது. அவை:

1. நித்ய ப்ரதோஷம்
2. பக்ஷ ப்ரதோஷம்
3. மாஸ ப்ரதோஷம்
4. மஹா ப்ரதோஷம்
5. ப்ரளய ப்ரதோஷம் என்பன.

### 1. நித்ய ப்ரதோஷம்

தினந்தோறும் உதயத்திலிருந்து இருபத்தாறேகால் நாழிகைக்கு மேல் மூன்றே முக்கால் நாழிகைக் காலம் (அதாவது, காலை 6.00 மணிக்கு சூரிய உதயம் கணக்கிடப்

பட்டால், மாலை 4.30 மணியிலிருந்து 6.00 மணி வரையிலான காலம்) நித்ய ப்ரதோஷம் எனப்படும்.

**2. பக்ஷ ப்ரதோஷம்**

சுக்ல பக்ஷ த்ரயோதசி தினத்தன்று மேற்கூறிய ப்ரதோஷ காலம் பக்ஷப்ரதோஷம் எனப்படும்.

**3. மாஸப்ரதோஷம்**

* க்ருஷ்ண பக்ஷ த்ரயோதசி தினத்தன்று மாலை மேற்கூறிய காலம் மாஸ ப்ரதோஷம் எனப்படும்.

**4. மஹா ப்ரதோஷம்**

க்ருஷ்ண பக்ஷ த்ரயோதசி சனிக்கிழமையில் கூடிவரும் மாலை மஹா ப்ரதோஷ காலம். இது மிக விசேஷமானது. சனிக்கிழமையும், த்ரயோதசியும் சுக்லபக்ஷத்தில் கூடி வருவது சனிப்ரதோஷம் எனப்படும். இதுவும் விசேஷமானதே.

**5. ப்ரளய ப்ரதோஷம்**

ஊழிக்காலத்தில் (ப்ரளய காலத்தில்) அனைத்தும் சிவபெருமானிடம் ஒடுங்கும். இதற்கு ப்ரளய ப்ரதோஷம் என்று பெயர்.

இப்படியாக ப்ரதோஷம் ஐந்து வகையாகப் பிரிக்கப் படுகிறது. இவற்றில் நித்யப்ரதோஷத்தில் சிவாலய தர்சனம் சிறந்ததாகவும், மற்றைய பக்ஷ – மாஸ – மஹா ப்ரதோஷங்களில் உபவாசம் இருந்து வழிபடுவது மிகச் சிறப்பு வாய்ந்ததாகவும் சாத்திரங்கள் கூறுகின்றன. ஆகவே சிவபெருமானுக்கு வழிபாடாற்ற உன்னதமானது ப்ரதோஷமாகும்.

## விரதமிருக்கும் முறை

இனி, ப்ரதோஷத்தன்று உபவாசம் இருக்கும் முறைமை விளக்கப்படுகிறது. காலையில் துயிலெழுந்து, நித்திய

* சாந்த்ரமானப்படி க்ருஷ்ண பக்ஷம் என்பது மாதத்தின் பின் பகுதியாகும். எனவே, இங்கு க்ருஷ்ண பக்ஷ ப்ரதோஷம் மாஸப்ரதோஷமாகக் கொள்ளப்பட்டது.

கடன்களை முடித்து, ஸ்நானம் செய்து, வீட்டில் ஆன்மார்த்த சிவபூஜையைச் செய்பவர்கள் முதலில் அதைச் செய்து முடிக்க வேண்டும். எந்த உணவும் உண்ணக் கூடாது. இதற்கு உபவாசம் என்று பெயர். மாலையில் ப்ரதோஷ காலத்தில் வீட்டில் சிறப்பாக சிவபூஜை செய்து வழிபடலாம். இயலாதவர்கள் ஆலயத்திற்குச் சென்று, வழிபாடாற்றலாம். இரவு, பால் மற்றும் பழம் இவைகளை மாத்திரம் புசித்து, மறுநாள் காலை பூஜை முடித்த பிறகு உணவருந்தி, விரதத்தை முடிக்க வேண்டும்.

## நந்தி தேவர் வழிபாடு

கைலாயத்தில் சிவபெருமானுடைய ஆலயத் திருவாயிலில் பெருமானுடைய ஆஜ்ஞையை சிரமேற் கொண்டு, பொற்பிரம்பும், உடைவாளும் ஏந்தி, நந்தி தேவர் என்பவர் காவல் புரிந்து வருபவர். ஹாலாஹல விஷத்தால் வருந்திய தேவர்களின் நிலையை சிவபெருமானிடத்தில் எடுத்துரைத்த பெருமை வாய்ந்தவர். ஊழிக்காலத்தில், இறைவனுடைய ப்ரளய கால தாண்டவத்தில் அனைத்து சராசரங்களும் அடங்கி ஒடுங்கிய பொழுது, நந்தியெம் பெருமானார் மாத்திரம் பெருமானுடைய பெருங்கருணை யினாலே அவர்தம் வாகனமாயிருந்து, திருத்தாண்டவம் காணும் பேறுபெற்றவர். விஷத்தால் மயங்கிய அனைவருக்கும் சிவபெருமானுடைய ஆஜ்ஞை யினாலே ''காப்பரிசி'' தந்து காத்தருளினார். வெல்லமும் அரிசியும் கலந்து கொடுத்து எல்லோரையும் காத்ததினால் அதற்கு ''காப்பு அரிசி'' என்று பெயர். இதனால்தான் ப்ரதோஷ வழிபாட்டில் நந்திதேவருக்கு அருகம்புல் மாலையும், காப்பரிசியும் நிவேதனம் செய்யப்பட்டு எல்லோருக்கும் விநியோகிக்கப்படுகிறது. அது எல்லா நோய்களையும் போக்க வல்லது. ஐச்வர்யங்களை வளரச் செய்வது.

## ஸோமஸூத்ர ப்ரதக்ஷிணம்

ப்ரதோஷ காலத்தில் நந்திதேவர் வழிபாட்டை முடித்து, அங்கிருந்து, அப்ரதக்ஷிணமாக உட்ப்ராகாரத்தையடைந்து, ஸ்ரீசண்டேசரை தரிசிக்க வேண்டும். பிறகு அங்கிருந்து வலமாக நந்திதேவரையடைந்து வழிபட வேண்டும்.

நந்திதேவரை தரிசித்து அங்கிருந்து வலமாக ப்ராகார ப்ரதக்ஷிணம் செய்தவாறு சண்டேசரை அடைந்து தரிசிக்க வேண்டும். அங்கிருந்து அப்ரதக்ஷிணமாக நந்தி தேவரை அடைந்து வழிபட வேண்டும். இதுபோல் மூன்று, ஐந்து, ஏழு என்ற அளவில் சக்திக்குத் தகுந்தவாறு ஸோமஸூத்ர ப்ரதக்ஷிண முறையில் சிவபெருமானை தரிசிப்பது எல்லா பாபங்களையும், தரித்ரங்களையும் போக்கும் என்று ஆகம சாஸ்திரங்கள் கூறுகின்றன.



## 𑌵𑌚𑌨-𑌵𑌿𑌵𑌰𑌣𑌮𑍍

1. 𑌪𑍍𑌰𑌕𑌰𑍍𑌷𑍇𑌣 𑌦𑍋𑌷𑌃 𑌪𑍍𑌰𑌦𑍋𑌷𑌃
2. 𑌦𑍋𑌷𑌾
3. 𑌦𑍋𑌷𑌾𑌯𑌾𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍 𑌪𑍍𑌰𑌦𑍋𑌷𑌃
4. 𑌦𑍋𑌷𑌾𑌪𑌿 𑌨𑌨𑍍𑌦𑌤𑌿 𑌅𑌹𑌿𑌮𑌾𑌂𑌶𑍁𑌵𑌂𑌶𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌃।
5. 𑌦𑌿𑌵𑌾𑌹𑍍𑌨𑍀𑌤𑍍𑌯𑌥 𑌦𑍋𑌷𑌾 𑌚

   𑌨𑌕𑍍𑌤𑌂 𑌚 𑌰𑌜𑌨𑌾𑌵𑌪𑌿।

   — 𑌅𑌮𑌰𑌕𑍋𑌶𑌃 – 3-4-6 – P. 𑌪𑍃𑌷𑍍𑌠𑌮𑍍 – 517

6. 𑌪𑍍𑌰𑌦𑍋𑌷𑍋 𑌰𑌜𑌨𑍀𑌮𑍁𑌖𑌮𑍍।

   — 𑌅𑌮𑌰𑌕𑍋𑌶𑌃 – 1-4-6 – 𑌪𑍃𑌷𑍍𑌠𑌮𑍍 – 36.

7. 𑌤𑌾𑌣𑍍𑌡𑌵𑌂 𑌵𑌿𑌧𑍁𑌨𑍍𑌵𑌾𑌨𑌂 𑌚

   𑌮𑍁𑌦𑍍𑌵𑍍𑌯𑌿𑌜𑍍𑌞 𑌮𑍁𑌖𑌾𑌪𑌤𑌿𑌮𑍍।




# பலிபீடம்

*சிவஸ்ரீ* A.V. *ரவிசுவாமிநாத சிவாச்சாரியார்*

சிவபெருமானுக்கு ஆற்றப்படும் ஒவ்வொரு கால பூஜை நிறைவிலும் (விலக்கப்பட்ட காலங்களைத்தவிர ஏனைய காலங்களில்) பலியிடுதல் அவசியமென சிவாகமங்கள் கூறுகின்றன. காரணாகமத்தில் ''வ்ருஷாதி பலிபீடாந்தம்...[1]'' என்று சொல்லியபடி வ்ருஷபம் முதல் பலிபீடம் வரையில் அன்றாட பூஜைகளில் பலியிடுதலை விசேஷமாகச் செய்ய வேண்டும்.

## மூவித லிங்கங்கள்

ஆலயத்தில் மூவகை லிங்கங்கள் கூறப்படுகின்றன. அவை ''ஸ்தூல லிங்கம்...[2]'' என்ற ச்லோகத்தால் விளங்கும். அதாவது, கருவறையின் மேல்புறம் அமைந் திருக்கும் விமானம் 'ஸ்தூல லிங்கம்' எனப்படும். கருவறை யில் எழுந்தருளியிருக்கும் லிங்கம் 'ஸூக்ஷ்ம லிங்கம்' எனப்படும். பலிபீடம் 'பத்ர லிங்கம்' என வழங்கப்படும்.

'ஸ்தூலம்' என்றால் மிகப்பெரிய என்று பொருள். மிகப்பெரிய லிங்க வடிவில் பெருமானை தரிசிக்கும் நிலையில் அமைவதால் விமானத்திற்கு 'ஸ்தூல லிங்கம்' என்று பெயர்.

'ஸூக்ஷ்மம்' என்றால் நுண்ணிய என்று பொருள். சிறிய லிங்க வடிவில் மூல ஸ்தானத்தில் எழுந்தருளும் சதாசிவப் பெருமானுக்கு ஸூக்ஷ்மலிங்கம் எனப் பெயர்.

'பத்ரம்' என்றால் மங்களம் என்று பொருள். அதாவது, ஆலயத்திற்குள் நுழைந்ததும் த்வஜஸ்தம்பத்தை தரிசித்த பிறகு பலிபீடத்தை தரிசித்து தம்மிடமுள்ள அறுவகை தீய குணங்களையும்*, பாசத்தையும் பலியிட்டதாக எண்ணி,

* ஆசை, சினம், பேரவா, மயக்கம், திமிர், பொறாமை என்பன.

ஆலயத்தில் உட்புகுந்து, சிவபெருமானை தரிசிக்க வேண்டும். தீயகுணங்களும், பாசமும்*, ஒழிந்தால்தான் சிவபெருமானை தரிசித்து, பத்ரமாகிய மங்களம் கிடைக்கப் பெறுவர் என்பதை பலிபீடம் உணர்த்துகிறது.

## ஆலயத்தில் ஆறு ஆதாரங்கள்

சிவாலயத்தை புருஷ வடிவமாகக் கொள்ள அதன் ஷடாதார ஸ்தானங்கள் கீழ்வருமாறு எண்ணப்படுகின்றன.

| | | | |
|---|---|---|---|
| 1. | மூலாதாரம் | – | கோபுர வாயில் |
| 2. | ஸ்வாதிஷ்டானம் | – | பலிபீடம் |
| 3. | மணிபூரகம் | – | த்வஜஸ்தம்பம் |
| 4. | அநாஹதம் | – | நந்தி |
| 5. | விசுத்தி | – | உட்கோபுர வாயில் |
| 6. | ஆஜ்ஞை | – | அந்தராளவாயில் |
| | †ப்ரம்ஹரந்த்ரம் | – | மூலஸ்தான லிங்கம் |

மேலும், பதி, பசு, பாச நிலைகளில் சிவலிங்கம் பதியாகவும், நந்தி பசுவாகவும், பலிபீடம் பாசமாகவும் சொல்லப்படுகின்றன.

இப்படியாக

1. மூவகை லிங்கங்களில் 'பத்ர லிங்கம்' என்றும்,
2. ஆலயத்தின் ஸ்வாதிஷ்டான ஸ்தானமாகவும்,
3. பாசத்தைப் போக்கும் மூர்த்தியாகவும்,

பலிபீடம் ஆலயத்தில் விளங்குகிறது.

## பலிஸ்தானங்கள்

பலிபீடத்தின் மேல் பாணவடிவில் அமைந்திருக்கும் இடத்திற்கு "கர்ணிகை" என்று பெயர். அதன் கீழ்புறம் கீழ்நோக்கிய தாமரை இதழ்கள் அமைந்திருக்கும். அதன் கீழ் பீடம் அமையும்.

* ஆணவம், கன்மம், மாயை என மூன்று.

† ஆறு ஆதாரங்களையும் கடந்து உள்ள இடம்.

| | | |
|---|---|---|
| கர்ணிகையின் நடுவில் | – | அவிக்னனையும் |
| கிழக்கு திசை இதழில் | – | ஆமோதனையும் |
| தென் திசை இதழில் | – | ப்ரமோதனையும் |
| மேற்கு திசை இதழில் | – | ப்ரமுகனையும் |
| வடக்கு திசை இதழில் | – | துர்முகனையும் |
| வடகிழக்கு திசை இதழில் | – | விக்னகர்த்தனையும் |

பூஜித்து, பீடத்தின் பத்து திசைகளிலும் இந்த்ராதி தேவர்களை பூஜை செய்ய வேண்டும். இதனை "அவிக்னம் கர்ணிகா மத்யே...[4]" எனத் தொடங்கும் காரணாகமவசனம் நன்கு விளக்கும். மேலும் அவர்களுடைய நிறங்களை "ஆமோதம் ச்யாமவர்ணம் து...[5]" என்ற வாக்கியம் நன்கு உணர்த்தும். ஆமோதன் பச்சை நிறம், ப்ரமோதன் கருப்பு, ப்ரமுகன் வெண்மை, துர்முகன் சிகப்பு, அவிக்னன் அல்லிப்பூ நிறம், விக்னகர்த்தன் மைபோன்று கருப்பு நிறம் என்றவாறு தியானிக்க வேண்டும்" என்பதே அதன் பொருள்.

## பலியிடும் முறை

இனி பலிபோடும் முறை சிந்திக்கப்படுகிறது. "பாஹ்யபீடம் ப்ரவிச்யாத...[3]" என்று பலியிடும் முறை கூறப்பட்டுள்ளது. அதன் பொருளாவது – ஆலயத்தில் வெளிப்புறம் அமைந்துள்ள பலிபீடத்தினருகே வடக்கு முகமாக இருந்து பலியிடல் வேண்டும். ஆமோதன், ப்ரமோதன், ப்ரமுகன், துர்முகன், அவிக்னன், விக்னகர்த்தன் என்ற அறுவர் பலிபீடத்தின் அதிதேவதை களாக இருப்பர். இந்திரன், அக்னி, யமன், நிர்ருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், ப்ரம்ஹன், விஷ்ணு என்ற பதின்மரும் பலிபீடத்தில் அவர்களுக்குரிய திக்குகளில் பூஜிக்கத் தகுந்தவர்கள்.

## பலியன்னத்தின் அளவு

"கபித்த பல மாத்ரேண...[6]" என்ற வசநம் பலியன்னத்தின் அளவை நன்கு விளக்கும். அதன் பொருளாவது : "விளாங்கனி அளவிலும், அல்லது கோழி

முட்டை அல்லது தேங்காய் அளவிலும் பலியன்னத்தை உருண்டையாகச் செய்து பலி போட வேண்டும்'' என்பதாகும்.

பலியன்னத்தைப் புசிக்கக் கூடாது. மஹோத்ஸவத்தில் மாத்திரம் குழந்தை இல்லாதவர்கள் த்வஜ ஸ்தம்பத்தின் அடியில் இடப்படும் பலியன்னத்தைப் புசித்தால், குழந்தை பிறக்கும் என்பதை ''கர்போத்பத்தி...[7]'' என்ற காரணாகம வசநத்தால் அறியலாம்.



## വചന വിവരണം

1. വൃഷാദി-ബലിപീഠാനാം
ബലിം കുര്യാദ്വിശേഷതഃ ।
(-നിത്യോത്സവലക്ഷണ സംഗ്രഹഃ-വൃദ്ധി-145)

2. സ്ഥൂല-ലിംഗം വിമാനം സ്യാത്
സൂക്ഷ്മലിംഗം സദാശിവഃ ।
ബലിപീഠം ഭദ്ര-ലിംഗം
ലിംഗം ത്രിവിധമുച്യതേ ॥
(-നിത്യോത്സവലക്ഷണസംഗ്രഹഃ- വൃ- 147)

3. ബാഹ്യ-പീഠം പ്രവിശ്യാഥ
ഗോപുരാദിർവഃ സ്ഥിതഃ ।
ക്രമശശ്ച പ്രമശശ്ച
പ്രദോ ദൂർവസ്ഥയാ ॥
ചവിഷ്ണോ വിഷ്ണു-ക്ഷേത്രാ ച
ബലി-പീഠാധിദൈവതാഃ ।
ഇന്ദ്രാദിലോകപാലാംശ്ച
യജേത സ്വ-സ്വ-ദിക്സ്ഥിതാൻ ॥
(-നിത്യോത്സവലക്ഷണ സംഗ്രഹഃ, വൃദ്ധി-145)

4. ചവിഷ്ണം കർണികാ-മധ്യേ
ക്രമശം പരിവൃദ്ധിഷു ।

# பவித்ரோத்ஸவம்

*சிவஸ்ரீ B. ஸர்வேச்வர சிவம்*

ஆன்மாக்கள் லயமாகும் ஆலயத்தில் நித்ய பூஜையே இம்மையில் போகத்தையும், மறுமையில் மோக்ஷத்தையும் கொடுப்பதாகும். மேலும், ஆலயங்களில் மஹோத்ஸவத்தால் லோகஸாமான்யர்களும் நான்கு வித தீக்ஷை† கிடைக்கப்பெற்று மோக்ஷத்தை அடைவிக்கப் படுகிறார்கள். அப்படி ஆலயங்கள்தோறும் நடைபெறும் பூஜையில் மந்த்ரலோபம், தந்த்ரலோபம், கிரியாலோபம், த்ரவ்ய லோபம் போன்ற குறைகள் ஏற்படும். இக்குறைகளை நீக்கி ஆன்மாக்கள் யாவும் போக மோக்ஷங்களைப் பெற்றுய்ய நித்யாங்கமாய் விதிக்கப்பட்டதே "பவித்ரோத்ஸவம்" ஆகும். இதை நிர்மலமணி தேசிகர் "ஏகாப்தோத்பவ...[1]" என்று கூறுகிறார். அதாவது முதல் வருடம் பவித்ரோத்ஸவம் செய்ததின் பிறகு, அடுத்த வருடம் பவித்ரோத்ஸவம் செய்யும் காலத்திற்கு முன்பு வரை, ஒரு வருட காலம் நித்யபூஜைகளில் ஏற்பட்ட குறைகளை நீக்கி, நிறைவை கொடுக்கக் கூடியது ஆகும். ஆகையால் வார்ஷிக பவித்ரோத்ஸவத்தை அவச்யம் செய்ய வேண்டும்.

## பவித்ரம்[2] – என்பதின் பொருள்

பவித்ரம்* என்றால் புனிதமானது என்று பொருள். புனிதத் தன்மையை ஏற்படுத்துவதே பவித்ரா ரோஹணத்தின் நோக்கம். பவி: என்றால் வஜ்ரத்திற்குப்

† சமயதீக்ஷை, விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை, ஆசார்ய–அபிஷேகம்

* "புவ: ஸம்ஜ்ஞாயாம்" என்ற பாணினி சூத்ரப்படி "பூங் பவநே" என்ற தாதுவுடன் "இத்ர" என்னும் ப்ரத்யயத்தைச் சேர்ப்பதால் பவித்ரம் என்பது "ஸம்ஜ்ஞா" பதமாக அமைகிறது.

பெயர். "பவே: த்ராயதே இதி பவித்ரம்[3]..." வஜ்ரம் என்ற நரகத்திலிருந்து காப்பதாலே பவித்ரம் என்று பெயர். இதை "ஸந்த்ராயதே...[4]" என்று கூறுவர். மேலும் "பதநாத்...[5]" என்று காமிகாகமம் கூறுகிறது.

ஸோமசம்புபத்ததி டீகாவில் – "பூஜா வைகல்ய...[6]" என்று கூறுகிறார். பூஜையில் ஏற்பட்ட தோஷங்களைப் போக்குவது என்பது இதன் பொருள் ஆகும். இதையே காரணாகமம் "பவித்ரகமஹம்...[7]" என்று கூறுகிறது.

## பவித்ரத்தின் வகைகள்

பவித்ரம் என்பது – நித்ய பவித்ரம், நைமித்திக பவித்ரம், காம்ய பவித்ரம் என மூன்று வகைப்படும். இதை "நித்யம் நைமித்திகம்...[8]" என்று காரணாகமம் கூறுகிறது.

நித்ய பவித்ரம் என்பது தினமும் பூஜையில் அருகம்புல், அக்ஷதை, புஷ்பம், தர்பம், வில்வபத்ரம், சந்தனம் இவற்றைக் கொண்டு தத்வ மந்திரங்களால் சுவாமியின் சிரஸில் சமர்ப்பணம் செய்யப்படுவதாகும். மோக்ஷத்தை விரும்புபவன் ஆத்மதத்வம், வித்யா தத்வம், சிவதத்வம் என்ற கிரமத்திலும், போகத்தை விரும்புபவன் சிவதத்வம், வித்யா தத்வம், ஆத்ம தத்வம் என்ற முறையிலும் பவித்ரத்தை சமர்ப்பிக்க வேண்டும். அல்லது மூன்று தத்வங்களுக்கும் அதிபதியாகிய சிவனின் மூலமந்த்ரத்தாலே சமர்ப்பிக்கலாம். நித்ய பவித்ரம் இல்லாத பூஜை தாமஸ பூஜை என்பதை "பவித்ரேண...[9]" என்று மோஹ சூரோத்தரம் என்ற ஆகமம் கூறுகிறது.

நித்ய பூஜையில் பவித்ரம் அளிக்கத் தவறிவிட்டால் அந்த பூஜைகளில் தெரிந்தோ, தெரியாமலோ செய்த தோஷங்கள் பூஜாபலனை அடைய விடாமல் தடுக்கும். இதை "ஸர்வபூஜாவிதி...[10]" என்று ஸோமசம்பு சிவாச்சாரியார் கூறுகிறார். ஆகவே பவித்ராரோஹணம், அல்லது பவித்ரோத்ஸவம் மிகவும் இன்றியமையாததாகும்.

## பவித்ராரோபண காலம்

"ஆஷாட...[11]" என்று நிர்மலமணி தேசிகர் கூறுகிறார். அதாவது, "ஆடி, ஆவணி, புரட்டாசி ஆகிய மாதங்களில்,

சுக்லபக்ஷம் அல்லது கிருஷ்ணபக்ஷத்தில் மோக்ஷத்தை அடைய விரும்புபவனும், சுக்ல பக்ஷத்தில் போகத்தை அடைய விரும்புபவனும், அஷ்டமீ அல்லது சதுர்தசியில் பவித்ராரோபணத்தைச் செய்ய வேண்டும்'' என்று பொருள்படும்.

மேலும் ஆடிமாதம் உத்தமம், ஆவணி மாதம் மத்யமம், புரட்டாசி மாதம் அதமம். மிகவும் முடியாத பக்ஷத்தில் ஐப்பசி அல்லது கார்த்திகை மாதத்தில் பவித்ரோத்ஸவம் செய்யலாம். கார்த்திகை தீபத்திற்கு பிறகு பவித்ரோத்ஸவத்தை செய்யக் கூடாதென்பதை ''க்ருத்திகா தீபத: ...[12]'' என்று காமிகம் கூறுகிறது.

மேலும் விஷ்ணுசயனக் காலத்தில் தான் பவித்ரோத்ஸவத்தைச் செய்ய வேண்டும் என்பதை ''ஆஷாடாதி...[13]'' என்று சோமசம்பு கூறுகிறார். பவித்ரோத்ஸவத்திற்கு குரு சுக்ரமூடம் இருக்கக் கூடாது. அவ்வாறு உள்ள மாதத்தை விட்டுவிட்டு மற்ற ஒரு மாதத்தில் பவித்ரம் அளிக்க வேண்டும். மூன்று மாதங்களி லேயும் குரு–சுக்ரமூடம் இருந்து, அவர்கள் உதயம் ஆகா விட்டாலும், மற்றொரு மாதத்தில் பவித்ரோத்ஸவத்தை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும். இதை சித்தாந்த சேகரத்தில் ''கவௌ குரௌ...[14]'' என்று விச்வநாதர் கூறுகிறார்.

இந்த பவித்ராரோபணம் நித்யம் என்னும் வகையைச் சாராது. ஏனெனில், இது தினமும் அனுஷ்டிக்கப்படுவ தில்லை. மேலும் நித்யபவித்ரத்திற்கும் இதற்கும் நிறைய வேறுபாடுகள் உள்ளன.

இது ப்ராயச்சித்தத்தையும் சாராது. ஏனெனில் ப்ராயச்சித்தத்திற்கு காலங்கள் விதிக்கப்படவில்லை. இதற்கோ ஆஷாடம் முதலிய காலங்கள் விதிக்கப் பட்டுள்ளன. மேலும், ப்ராயச்சித்தம், விதித்த கர்மாவை செய்யாததால் ஏற்படும் தோஷங்களை நீக்க வல்லதே தவிர, அக்கர்மாவினால் ஏற்படும் பலனை அளிக்க வல்லது அல். ஆனால் இந்த பவித்ரோத்ஸவம் தோஷத்தை நீக்குவதோடு இல்லாமல் பலனையும் அளிக்கவல்லது.

காம்யம் என்னும் வகையையும் சாராது. ஏனெனில் இது, நாம் விரும்பியதைக் கொடுக்கக் கூடியதே தவிர விருப்பத்திற்கு உட்பட்டதல்ல.

நைமித்திகத்திலும் இது சேராது. ஆகவே பவித்ராரோபணம் ஆரம்பத்தில் கூறியது போல் நித்யத்திற்கு ஓர் அங்கமே. இவ்விஷயம் காலோத்தரத்தில் "ததோ...[15]" என்று கூறப்பட்டுள்ளது. இந்த பவித்ரோத்ஸவத்தை நன்கு அனுஷ்டித்து ஒருவருட பூஜாபலனை ஸம்பூர்ணமாக அடைவோமாக.



## வசந விவரணம்

1. ஸகாரஜ்ஞா நாஸ்வ-கஉ- ஜொவஹிஉ°ஙம்
நித்ய-க்ரியா-ஸ°ஙகூம் ।
-(க்ரியா-கூஉ-ஜைத்ராதிகா (வ்யாவஹா) வ்யூஹா,
வ்யூஷ்டி 147)

2. ஸ°ஜ் + ஜ த்ர = ஸவித்ரூ.

3. ஸவை: த்ராயதெ ஜதி ஸவித்ரூ ।

4. ஸஞ்ராயதெ யஞாரகாது ஸ°ஊாஂஸம்
வஜூாஹியாநாத்து தத: ஸவித்ரூ ।
(ஸிஷாஜமெஸா:, ஸவித்ரவிவி: ஜ்லோக: 4,
வ்யூஷ்டி. 124)

5. ஸதநாது த்ராயதெ யஸ்லாது
தஜ்ாஜைதது ஸவித்ரகூ ।
( காவிகாஶூ: உதரஹாரூ: - ஶ்ராவண-ஊஸை
ஸவித்ராணாஹணவியி:, ஜ்லோக:-5. வ்யூஷ்டி 48)

6. ஸ°ஜா-வைகஉத்க: ஸ°நாதி ஜதி
ஸவித்ரூ ।
(ஸைாஉஸஂஜ்ஞ ஸ்திதி:, டீகா,
வ்யூஷ்டி - 69)

7. ஸவித்ரகூஉஹம் ஸஜெத்
ஸஸ்வஜைாஷ - நிகூஜநஉ ।
(ஸைாஉ ஸஂஜ்ஞ ஸஷதி:, டீகா, வ்யூஷ்டி-70)

12. 𑌕𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾-𑌦𑍀𑌪𑌤𑌃 𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍

𑌨𑍈𑌵 𑌕𑌾𑌰𑍍𑌯𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌕𑌮𑍍 ।

(𑌕𑌾𑌮𑌿𑌕𑌾𑌗𑌮𑌃, 𑌉𑌤𑍍𑌤𑌰𑌭𑌾𑌗𑌃, 𑌶𑍍𑌰𑌾𑌵𑌣 𑌮𑌾𑌸 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑍋𑌹𑌣 𑌵𑌿𑌧𑌿𑌃, 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃- 8, 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 48)

13. 𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶𑍀𑌷𑍍𑌟𑌮𑍀 𑌤𑌿𑌥𑍍𑌯𑍋𑌶𑍍𑌚𑍈𑌵

𑌸𑍌𑌮𑍍𑌯𑍇 𑌵𑌾 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑍇 ।

(𑌸𑍋𑌮𑌶𑌂𑌭𑍁𑌪𑌦𑍍𑌧𑌤𑌿𑌃, 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌲𑌕𑍍𑌷𑌣𑌵𑌿𑌧𑌿𑌃, 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 4, 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇 - 69)

14. 𑌕𑌨𑍍𑌯𑌾 𑌗𑍍𑌰𑌾𑌮 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌮𑌯𑌂 𑌪𑍍𑌰𑌭𑌾𑌤𑍇

𑌮𑌾𑌸𑌤𑍍𑌰𑌯𑍇 𑌯𑌦𑍍𑌯𑌦𑌯𑌨𑍍 𑌨 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌿 ।

𑌤𑌯𑌾𑌪𑌿 𑌕𑍍𑌷𑍀𑌣 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌮𑌤𑍍𑌰

𑌨𑍈𑌮𑌿𑌤𑍍𑌤𑌿𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌉𑌤 𑌨𑍈𑌤𑍍𑌯𑌕𑌤𑍍𑌵𑌾𑌤𑍍

(𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌰𑍍𑌣𑌵𑌃, 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌃, 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃-6 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇-124)

15. 𑌤𑌥𑌾 𑌨𑌿𑌤𑍍𑌯𑌾𑌂 𑌗𑍃𑌹𑍇 𑌵𑌾𑌹𑍍𑌨𑍇𑌃

𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌰𑍋𑌪𑌣𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥

(𑌕𑍍𑌰𑌿𑌯𑌾-𑌕𑍍𑌰𑌮𑌦𑍍𑌯𑍋𑌤𑌿𑌕𑌾 (𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾) 𑌸𑌹𑌾 𑌪𑍃𑌷𑍍𑌠𑍇-148)

# பஞ்சாஸந பூஜை

*சிவஸ்ரீ G. தியாகராஜ சிவாச்சாரியார்*

'ஆஸ உபவேசநே[1]' என்ற தாதுவிலிருந்து ஆஸநம் எனும் சொல் உண்டாயிற்று. அமரும் இடம் என்பது இதன் பொருள். எங்கும் வ்யாபகமாக இருக்கின்ற சிவனை ஓரிடத்தில் அமர்த்தி, பூஜை செய்வதே இதன் நோக்கம். ஆஸநம் என்பது சுவாமிக்கு ஆதாரமாகும். இதற்கு ஆதேயன் இறைவன். 'ஆஸநம் கல்பயேதத்ர...[2]' என்ற காரணாகம வசநத்திலிருந்து இதை உணரலாம். நாதம் என்பது லிங்கமாகவும், பிந்துவானது ஆஸந (பீட) மாகவும் உள்ளது.

## ஆஸந வகைகள்

ஆஸநங்கள் இரண்டு வகைகள். அவை முறையே 1. சலாஸநம் 2. ஸ்திராஸநம் என்பன.

### சலாஸநம்

சிறிது காலத்திற்காக மட்டும் பூஜிக்கப்படுவது சலாஸநம். உதாஹரணமாக, விக்னேச்வர பூஜை, புண்யாஹ வாசநம், *மூலாலயத்திலிருந்து †போகாலயத்திற்கு இறைவனை அர்த்தஜாம பூஜையின் பொழுது எழுந்தருளச் செய்வது போன்ற காலங்களில் சலாஸநம் செய்யப் படுகிறது. ''சலாஸநம்...[3]'' என்ற காரணாகமவசநத்தால் இதை உணரலாம். பஞ்சாஸநத்தில் வருகின்ற யோகாஸநம் விமலாஸநம் ஆகிய இரண்டைத் தவிர பிற ஆஸநங்கள், சலாஸநத்தில் காணப்படுகின்றன.

* கர்ப—க்ருஹம்

† பள்ளியறை

ஸ்திராஸநம்

அநந்தாஸநம், ஸிம்ஹாஸநம், யோகாஸநம், பத்மாஸநம், விமலாஸநம் என்ற ஐந்து ஆஸநங்களைக் கொண்டதே ஸ்திராஸநமாகும். பஞ்சாஸநங்கள் என்பது தத்வமயமானவை. அதன் மேல் சிவனைப் பூஜிப்பது என்பது, சிவன் தத்வாதீதன் என்பதைக் குறிக்கும். பஞ்சாஸநங்களும் பஞ்சபூத ஸ்வரூபமானவை

| | | |
|---|---|---|
| அநந்தாஸநம் | – | நிலம் |
| ஸிம்ஹாஸநம் | – | நீர் |
| யோகாஸநம் | – | நெருப்பு |
| பத்மாஸநம் | – | காற்று |
| விமலாஸநம் | – | ஆகாயம் |

என்ற விவரத்தை "அநந்தம்...[4]" என்ற வசநத்தால் அறியலாம்.

பஞ்சாஸநங்களின் முறையை 'ததோऽநந்தாஸனம்...[5]' என்ற வசநத்திலிருந்து அறியலாம்.

## அநந்தாஸநம்

'பார்திவாண்டம்...[6]' என்ற வாக்கியத்திலிருந்து அநந்தாஸநத்தைப் பற்றி உணரலாம். ஒரு தாமரைப் புஷ்பமானது விதையிலிருந்து தோன்றி, நாளம், முகுளம், பத்மம் என்று பரிணாம வளர்ச்சி அடைவது போல இந்த ஆஸநங்கள் அமைந்திருக்கின்றன. இங்கு பூமியானது விதையாகக் கருதப்படுகிறது.

அநந்தாஸநம் கோடிஸூர்ய ப்ரகாசமாகவும், பீஜ வடிவாயும் உள்ளது. பூமியைத் தாங்கக் கூடிய ஆதாரசக்தி இதன் கீழே பூஜிக்கப்படுகிறது. இதில் எட்டு நாகங்கள் பூஜிக்கப்படுகின்றன. அவை 1. அநந்தன், 2. வாஸுகி, 3. தக்ஷகன், 4. கார்கோடகன், 5. சங்கபாலன், 6. குளிகன், 7. பத்மன், 8. மஹாபத்மன். இவை கிழக்கு முதலிய எட்டு திசைகளில் பூஜிக்கப்படுகின்றன நடுவில் அநந்தேசன் பூஜிக்கப்படுகிறார்.

## ஸிம்ஹாஸநம்

இது இரண்டாவது ஆஸநம். இதில் தர்மம், ஜ்ஞானம், வைராக்யம், ஐச்வர்யம் என்ற 4ம் சிங்கவடிவமாகப் பூஜிக்கப்படுகின்றன. இவற்றைப் பூஜித்து பின்பு அதர்மம், அஜ்ஞானம், அவைராக்யம், அனைச்வர்யம் என்ற நான்கினையும் பூஜித்து, பின்பு ராஜஸம், தாமஸம், சாத்விகம் என்ற முக்குணங்களைப் பூஜிக்க வேண்டும். இதுவே ஸிம்ஹாஸந பூஜை.

## யோகாஸநம்

மூன்றாவதான இவ்வாஸநத்தில் க்ருதயுகம், த்ரேதா யுகம், த்வாபரயுகம், கலியுகம் என்ற நான்கு யுகங்களைப் பூஜிக்க வேண்டும். பின்பு அவ்யக்தம், நியதி, காலம், கலை என்ற நான்கு தத்வங்களைப் பூஜிக்க வேண்டும். பின்பு கேசவன், அதச்சதநம் ஊர்த்வச்சதநம் என்ற மூன்றையும் பூஜித்தலே யோகாஸநமாம்.

## பத்மாஸநம்

தாமரையின் கிழங்கு, விதை, முளை, தண்டு, முட்கள், தளங்கள், கேஸரங்கள், கர்ணிகை ஆகியவற்றை இதில் பூஜிக்க வேண்டும். இத்தாமரையின் கிழங்கு ப்ருதிவீ தத்வமாயும், தண்டு என்பது கலாதத்வம் வரை வ்யாபித்த தாயும், க்ஷுப்தமாயை தாமரை வடிவாயும், வித்யேச் வரர்கள் 8 இதழ் வடிவாயும் உள்ளனர். 8 இதழ்களில் வாமா முதலிய 8 சக்திகளும், கர்ணிகையின் ஈசாந்யத்தில் மனோன்மநியும் பூஜிக்கப்படுவதே பத்மாஸநம்.

## விமலாஸநம்

விமலனான இறைவனுடன் நேரடித் தொடர்பு கொண்டுள்ளது இந்த ஆஸநமே. இதில் பூஜிக்கப் படுபவர்கள்.

| | | |
|---|---|---|
| சூர்ய மண்டலம் | அதிதேவதை | பிரம்ஹா |
| ஸோம மண்டலம் | அதிதேவதை | விஷ்ணு |
| அக்நி மண்டலம் | அதிதேவதை | ருத்ரன் |

சக்தி மண்டலம் அதிதேவதை ஈச்வரன்

அதன் மேல் குடிலா சக்தி.

இவ்வாறாக ஆதாரசக்தி முதல் குடிலா சக்தி வரை உள்ள ஆஸநமே பஞ்சாஸநமாம்.

அதன் மேலே தான் சிவன் வீற்றிருக்கிறார்.



5. ததோ஽நந்தாஸநம் ஸ்யாத்
ஸிம்ஹாஸநம் த்விதீயகம் ।
யோகாஸநந்த்ருதீயந்து
சதுர்த்த: பத்மாஸநம் பவேத் ।
பஞ்சமம் விமலாஸநந்து
பஞ்சஹஸ்தாதிகாஸ்ஸ்ம்ருதே ।
(நித்யார்ச்சநாவிதி: (காரணாகம:) ஶ்லோ-186-ப்ரு.13

6. பாயஸ்ஸிவாஜ்ஜயஸ்கந்(ம்)-
ஸ்தா(நா-)நம் கல்யாணதைவ ச ।
(நித்யார்ச்சநாவிதி: (காரணாகம:) ஶ்லோக-186.
ப்ருஷ்ட-138.)

# *பூத சுத்தி

## S. அருணசுந்தரம்

### பஞ்ச சுத்திகள்

ஒவ்வொரு பூஜையின் தொடக்கத்திலேயும் ''பஞ்ச சுத்தி[1]'' (ஐவகைச் சுத்தி) என்பது மிகவும் முக்கிய மானது. அவை 1. ஆத்ம சுத்தி (பூதசுத்தி), 2. ஸ்தான சுத்தி, 3. த்ரவ்ய சுத்தி, @4. மந்திர சுத்தி, 5. லிங்க (பிம்ப) சுத்தி என்பன.[2]

### *1. ஆத்ம (பூத) சுத்தி*

ஐவகைச் சுத்திகளுள் முதலாவதான இந்த சுத்தி, சில இடங்களில் ஆத்ம சுத்தி என்றும்,[3] சில இடங்களில் பூத சுத்தி[4] என்றும் குறிக்கப்படும். பூத சுத்தி என்பது ஆத்ம சுத்திக்கு ஒரு அங்கமே ஆகும். இதை ''ப்ரபா[5]'' என்னும் வ்யாக்யானத்தில் காணலாம். பூத சுத்தி, †அந்தர்யஜநம், §ஹோமம், ‡சமாதி ஆகிய நான்கும் சேர்ந்ததே ஆத்ம சுத்தி ஆகும். இவ்விடத்தில் ஆத்ம சுத்தி என்பதற்கு 'ஆன்மாவின் சுத்தி' எனப் பொருள் கொள்வதை விட ஆன்மா சார்ந்துள்ள உடலைச் சுத்தம் செய்வது எனப் பொருள் கொள்வது சிறந்தது.

### 2. ஸ்தான சுத்தி

நாம் இருக்கும் இடத்தை சுத்தம் செய்வது ஸ்தான சுத்தி ஆகும். பூஜை செய்யும் இடத்தில் உள்ள துஷ்ட

* அகோர சிவாச்சாரியாரின் 'க்ரியாக்ரம த்யோதிகை'யில் உள்ள ஒரு பக்ஷத்தைத் தழுவி பெரும்பாலும் இக்கட்டுரை அமைந்துள்ளது.

@ பூர்வகாரணம், குமாரதந்த்ரம் ஆகியவற்றின் 'நித்யார்ச்சநவிதி'யில் லிங்க (பிம்ப) சுத்தி நான்காவதாகவும், மந்த்ர சுத்தி ஐந்தாவதாகவும் உள்ளது.

† இதயகமலத்தில் இறைவனை பூஜிப்பது அந்தர்யஜநம்.

§ நாபியை (தொப்புள்) குண்டமாக நினைத்து அதில் பாவனையாக ஹோமம் செய்தல்.

‡ புருவமத்தியில் இறைவனை நினைத்துத் தன்மயமாதல்.

க்ரஹங்களை விரட்டுதல், இடையூறுகளைப்போக்குதல், எதிரிகள் எளிதில் நுழையாதவண்ணம் நம்மைச் சுற்றி நெருப்புமயமான ப்ராகாரத்தை உண்டாக்குதல், மூன்று விதமான அகழிகளை ஏற்படுத்துதல், சக்திகளை காவலுக்கு வைத்தல் ஆகிய சடங்குகள் ஸ்தான சுத்தியில் இடம் பெறும்.

**3. த்ரவ்ய சுத்தி**

பூஜைக்குரிய பொருள்களில் உள்ள மலாம்சத்தை நீக்கி, மந்திரமயமாக்கி, இறைவன் ஏற்பதற்கு உகந்ததாகச் செய்வதே த்ரவ்ய சுத்தி ஆகும்.

**4. மந்த்ர சுத்தி**

மந்திரங்கள் பல், முகவாய்க்கட்டை, உதடு முதலிய அங்கங்களிலிருந்து வெளிப்படுகின்றன. எனவே மாயையின் சம்பந்தத்தால் அவை அசுத்தமானபடியால், சக்தியற்றவையாகின்றன. ஆதலால் ஆகமங்களில் முக்கிய மானவைகளான ஸம்ஹிதா[9] மந்திரங்கள் பன்னிரெண்டும் சுத்தம் செய்யப்படுகின்றன.

**5. லிங்க (பிம்ப) சுத்தி**

லிங்கத்தில் பூஜை செய்யும் பொழுது 'லிங்க சுத்தி' என்றும், உருவமுடைய சிலைகளில் பூஜிக்கும் பொழுது 'பிம்ப சுத்தி' என்றும் கூறப்படும்.*

பூஜைகளில் புஷ்பம், அக்ஷதை போன்றவற்றின் வாயிலாக, பிம்பங்களில் (இறைவனிடத்தில்) மந்திரங்கள் வைக்கப்படுகின்றன. (இறைவனிடத்திலிருந்து புஷ்பம் போன்றவற்றை எடுத்தால், அதில் உள்ள மந்திரங்களும் வெளியே வந்து விடுகின்றன.)[6] பூஜைகளின் முடிவில் பூஜகர் மந்திரங்களை தன்னுள் அடக்கிக் கொள்கிறார். எனவே, மந்திரமற்ற சூன்யமான விக்ரஹங்களை துஷ்டக்ரஹங்கள் சூழ்ந்து கொள்கின்றன. பூஜகர், போகத்தையும் மோக்ஷத்தையும் அடையாவண்ணம் அவை இடையூறுகளைச் செய்கின்றன. எனவே அவற்றை

* காண்க.: பூர்வகாரணாகமம், குமார தந்த்ரம் – நித்யார்சன விதி படலம்

விரட்டி, மீண்டும் மந்திரங்களை ந்யாஸம் செய்து (வைத்து) வழிபாடு செய்ய உகந்ததாக விக்ரஹத்தைச் செய்வதே லிங்க (பிம்ப) சுத்தி ஆகும்.

## பூத சுத்தி – சொல் விளக்கம்

பூதங்களின் சுத்தி பூத சுத்தி. இங்கு பூதங்கள் என்பதற்கு, 'பூத–ப்ரேத–பிசாச' என்று உள்ள, துஷ்ட கணங்களுள் ஒன்றான பூதங்களாகப் பொருள் கொள்ளக் கூடாது. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐந்திற்கும், பூதங்கள்[7] என்று பெயர். அவைகளைச் சுத்தி செய்வதையே இங்கு 'பூத சுத்தி' என்னும் சொல் குறிக்கும்.

## பூத சுத்தியின் அவசியம்

நம் உடல், மேற்கூறிய ஐந்து பூதங்களால் ஆனது. தாய்[8] தந்தையரின் மலத்திலிருந்து உண்டானதால் மேலும் அசுத்த மானது. எனவே, இவ்வுடலில், அசுத்தமே வடிவானதில், இருந்து கொண்டு, நாம் நிர்மலமான, நித்தமும் புனிதமான சிவனைப் பூஜிப்பது என்பது ஒவ்வாத ஒன்று. எனவே நம் உடலை = ஐந்து பூதங்களைப் புனிதப் படுத்துவதே பூத சுத்தி ஆகும். உலகில் கூட தினமும் நாம், எந்த நபர்களைச் சந்திக்கின்றோமோ, அவர்களுக்குத் தக்கவாறு நம் வேஷங் களை மாற்றிச் செல்கிறோம். இல்லையேல் காவலாளிகள் போன்ற இடையூறுகள் மேலிட, எண்ணியவரைச் சந்திக்க முடியாமல் போகிறது. எனவே, அனைத்துப் பூஜைகளின் தொடக்கங்களிலும், நிர்மலனான மந்திர வடிவினனான இறைவனைப் போலவே, நாமும் நிர்மலர்களாகவும், மந்திர வடிவினர்களாகவும் ஆவது அவசியம்.

கண்களுக்குப்புலப்படாமல் உள்ள அசுத்தங்களை நீக்கவே, பூதசுத்தி செய்யப்படுகிறது. இதற்கு முன்ன தாகவே நம் உடலில் உள்ள, கண்ணுக்குப் புலப்படும், கண், காது போன்ற அனைத்து உறுப்புகளிலும் உள்ள அசுத்தங்களை ஸ்நானம் போன்றவற்றால் நீக்கி, பின்பே பூத சுத்தியைச் செய்ய வேண்டும்.

இறைவனின் வலது புறத்தில் வடக்கு முகமாக அமர்ந்து இதைச் செய்ய வேண்டும்.

## பூதசுத்தியைச் செய்யும் முறை

நமக்கு ஸூக்ஷ்மசரீரம், ஸ்தூலசரீரம் என இரண்டு உடல்கள் உள்ளன. இவ்விரண்டையும் சுத்தம் செய்யுங்கால் ஜீவனுக்கு ஆபத்து நேரிடக்கூடாது என்பதால் ஜீவனை த்வாதசாந்தத்தில் முதலில் சேர்க்க வேண்டும். பிறகு ஸூக்ஷ்ம–ஸ்தூல சரீரங்களை சுத்தம் செய்ய வேண்டும்.

### ஸூக்ஷ்ம–சரீர–சுத்தி

சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், மனஸ், புத்தி, அஹங்காரம் என்ற 8 தத்வங்களால் ஆனது ஸூக்ஷ்ம சரீரம். நம் உடலில் ஐந்து இடங்களில் உள்ள ப்ரம்ஹா முதலியவர்களிடம், இந்த 8 தத்வங்களை அர்ப்பணிப்பதே ஸூக்ஷ்ம தேஹ சுத்தியாகும். அதன் விவரம் –

| | தேவதை | வீற்றிருக்கும் இடம் | விடவேண்டிய தத்வம் |
|---|---|---|---|
| 1. | ப்ரம்ஹா | ஹ்ருதயம் | சப்தம், ஸ்பர்சம் |
| 2. | விஷ்ணு | கழுத்து | ரஸம் |
| 3. | ருத்ரன் | முகவாய்க்கட்டை | ரூபம், கந்தம் |
| 4. | ஈஸ்வரன் | புருவமத்தி | புத்தி, அஹங்காரம் |
| 5. | சதாசிவன் | ப்ரம்ஹரந்த்ரம் | மனஸ், (பிந்து) |

### ஸ்தூல தேஹ சுத்தி

வெளியில் தெரியும் நமது சரீரமே ஸ்தூலதேஹம் ஆகும். இது ஐந்து பூதங்களால் ஆனது. இவை ஐந்தும் குற்றம் உடையன. பூஜைக்காலங்களில் இவை ஐந்தும் இடையூறு செய்கின்றன. எனவே இவை ஐந்தையும் செயலற்றுச் செய்ய என்ன வழி? ஆகமங்கள் இவ்வாறு கூறுகின்றன. ஐந்து பூதங்களுள், ஒன்றுக்கொன்று விரோதமாக சில உள்ளன. அதாவது, நிலம் – காற்று, நீர் – நெருப்பு ஆகியவை ஒன்றுக்கொன்று விரோதமானவை. எனவே, ஒரு குறிப்பிட்ட பூதத்தின் இடங்களை, மற்றொரு

எதிர்பூதம் நிரப்பிக் கொண்டதாக பாவிக்க வேண்டும். அதாவது உடலில், ரத்தம், சிறுநீர் போன்றவை நீரின் அம்சங்கள். அவற்றை, எதிர் பூதமான நெருப்பு ஆக்ரமித்ததாக எண்ண வேண்டும். இவ்வாறு செய்வதால் அனைத்து பூதங்களும் செயலிழந்து இடையூறு செய்யா வண்ணம் இருக்கின்றன.

மேற்கூறியவாறு செய்ய வேண்டும் என்றால், முதலில் அந்தந்த பூதங்களின் ஸ்வரூபத்தை அறிதல் அவசியம். எனவே முதலில் அதைப் பார்ப்போம்.

| | நிலம் | நீர் | நெருப்பு | காற்று | ஆகாயம் |
|---|---|---|---|---|---|
| நிறம் | மஞ்சள் | வெண்மை | சிகப்பு | கருப்பு | புகை வண்ணம் |
| தன்மை | கடினம் | மென்மை | மேல் நோக்கு | உருவ மின்மை | சூன்யம் |
| அடையாளம் | வஜ்ரம் | தாமரை | ஸ்வஸ்திகம் | ஆறு புள்ளிகள் | அடையாளம் அற்றது |
| பீஜம் | லம் | வம் | ரம் | யம் | ஹம் |
| தேவதை | பிரம்ஹா | விஷ்ணு | ருத்ரன் | ஈச்வரன் | சதாசிவன் |
| மந்திரம் | சத்யோ–ஜாதம் ஹ்ருதயம் | வாமதேவம் சிரஸ் | அகோரம் சிகை | தத்புருஷம் கவசம் | ஈசானம் நேத்ரம் அஸ்த்ரம் |
| கலை | நிவ்ருத்தி | பிரதிஷ்டா | வித்யா | சாந்தி | சாந்த்யதீதா |
| குணங்களின் எண்ணிக்கை | 5 | 4 | 3 | 2 | 1 |
| உத்காத மந்த்ரம் | ஹ்லாம் | ஹ்வீம் | ஹ்ரூம் | ஹ்யைம் | ஹௌம் |
| மண்டல வடிவம் | சதுரம் | அர்த்த சந்திரன் | முக் கோணம் | ஷட் கோணம் | வட்டம் |

மேலே குறிப்பிட்டவாறு ஒவ்வொரு பூதங்களையும் தியானிக்க வேண்டும். ஒரு பூதத்தை தியானித்த பிறகு, அதற்கு உரிய உத்காத மந்திரத்தை, அதனதன் குணங்களின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு கூற வேண்டும். அதாவது நிலத்திற்கு ஐந்து குணங்கள். எனவே ஐந்து முறை உத்காத மந்திரத்தைக் கூற வேண்டும். இவ்வாறு செய்வதால் அவற்றின் குணங்கள் நீங்குகின்றன. பின்பு அவற்றை

வேற்று—பூதங்கள் வியாபிக்கும் பொழுது, அவை அனைத்தும் செயலிழந்து இருக்கும் பொழுது, கால் கட்டை விரலில் உள்ள நெருப்பினால் உடலை எரிக்க வேண்டும். அப்பொழுது உடலில் உள்ள தோஷங்கள் எரிந்து விடுகின்றன. பின்பு த்வாதசாந்தத்தில் தலைகீழாக உள்ள தாமரையிலிருந்து பெருகும் அம்ருத தாரையால் உடலை நனைத்தல் வேண்டும். ஆத்மாவை (ஜீவனை) மறுபடியும் ‡த்வாதசாந்தத்திலிருந்து கொணர்ந்து ஹ்ருதயத்தில் அமர்த்த வேண்டும். பின்பு மறுபடியும் அந்த ஆத்மாவிற்கு அம்ருதாபிஷேகத்தைச் செய்ய வேண்டும்.

இப்பொழுது நம் சரீரம் மலமற்றதாகவும் அம்ருதமயமாக வும் உள்ளது. இவ்வாறு உள்ள சரீரத்தில் மந்திரங்களை ந்யாஸம் செய்து நம் உடலை நிர்மலமாகவும் மந்திரமயமாக வும் செய்வதே பூத சுத்தியாகும்.

## பூத சுத்தியின் பயன்

†சமய தீக்ஷை ஆனவர்கள், தீக்ஷையில் அவர்களுக்கு உபதேசிக்கப்பட்ட மந்திரங்களை ஜபம் செய்து, சித்தி* செய்ய வேண்டும். ஆனால் அவர்களுடைய இந்த்ரிய சக்திகள் அவ்வாறு செய்யவிடாமல் தடுக்கின்றன. எனவே, அவர்கள் பூத சுத்தியைச் செய்தால், இடையூறு செய்யும் சக்திகள் செயலிழந்து போகும்.

@விசேஷ தீக்ஷை ஆனவர்கள், சிவபூஜை, ஹோமம் போன்றவற்றைச் செய்யும் பொழுது மேற்கூறிய இடையூறுகள் மேலிடாமல் இருக்க, பூத சுத்தியைச் செய்ய வேண்டும்.

‡ சிகையின் மேல், பனிரெண்டு அங்குலத்தின் முடிவு 'த்வாதசாந்தம்' எனப்படும்.

† சிவபூஜைக்குப் பணிவிடை செய்யும் தகுதியை ஏற்படுத்தும் சடங்கு சமயதீக்ஷை ஆகும்.

* உபதேசமாய் பெறப்பட்ட மந்த்ரங்களைக் குறிப்பிட்டவாறு ஜபம் செய்து, அவற்றை செயல்திறன் கொண்டதாகச் செய்வது, 'சித்தி செய்வது' எனப்படும்.

@ சிவபூஜை செய்து கொள்வது, ஹோமம் செய்து கொள்வது, சிவாகமங்களைப் படிப்பது ஆகிய தகுதிகளைத் தர வல்லது விசேஷ தீக்ஷை.

வினைகளைக் களைவதின் மூலம், பாசம் என்ற சிகையை நீங்க வைத்து, சிவத்துடன் சேர வழி செய்யும் #நிர்வாண தீக்ஷையை செய்து கொண்டவர்கள் கூட, நித்தமும் பூத சுத்தியைச் செய்யத்தான் வேண்டும். ஏனெனில், தீக்ஷையில் அவர்களுடைய சஞ்சிதவினை, ஆகாமிவினை ஆகிய இரண்டு மட்டுமே நீக்கப்பட்டன. ப்ராரப்த வினையை தினமும் அனுபவித்தே தீரவேண்டும். அதை அனுபவிக்கும் பொழுது உண்டாகும் வாஸனை, அதைத் தொடரும் மல—மாயாம்சங்கள் ஆகியவற்றை சிறிது—சிறிதாக அழிக்க பூத சுத்தியை அவசியம் செய்ய வேண்டும்.

மேலும், ஆதவனின் கதிர்கள் எங்கும் பரவியிருப்பினும், சூரியகாந்தமணியின்கண் புகும்போது, நன்கு உணரப் படுவது போல, அனைத்து இடத்திலும் சிவத்தன்மை பரந்து கிடப்பினும், பூத சுத்தி செய்யப்பட்ட உடலில் நன்கு விளங்குகிறது என்பது ஆகமங்களின் தீர்மானம்.



\# வினைகளை நீக்கி, சிவபதம் அளிப்பது நிர்வாண தீக்ஷை.

6. 𑌏𑌵𑌂 𑌕𑍃𑌤𑍇 [illegible]
𑌦𑍀𑌕𑍍𑌷-𑌪𑍀𑌠-𑌵𑌿𑌨𑍍𑌯𑌸𑍍𑌯-[illegible]-𑌉𑌪𑌸𑌂𑌹𑌾𑌰𑌾-
-𑌨𑌨𑍍𑌤𑌰𑌂 𑌦𑍀𑌕𑍍𑌷-𑌪𑍀𑌠𑌯𑍋𑌃 [illegible]
-[illegible] 𑌶𑌕𑍍𑌤𑌿-[illegible]𑌶𑌕𑍍𑌤𑌿-𑌪𑍍𑌰𑌤𑌿𑌬𑌨𑍍𑌧𑌕𑌵𑌿𑌘𑍍𑌨𑌾𑌃
𑌨𑌿𑌰𑌸𑍍𑌤𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ।

(𑌶𑌿𑌵𑌾𑌰𑍍𑌚𑌨𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌕𑌾, [illegible] 𑌪𑍃𑌷𑍍𑌠-41)

7. 𑌪𑍃𑌥𑌿𑌵𑍍𑌯𑌾𑌪𑌸𑍍𑌤𑌥𑌾 𑌤𑍇𑌜𑍋
𑌵𑌾𑌯𑍁𑌰𑌾𑌕𑌾𑌶 𑌏𑌵 𑌹𑌿 ।
𑌏𑌤𑌾𑌨𑌿 𑌪𑌞𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌿...... ।

8. [illegible]
[illegible] 𑌨 𑌯𑍁𑌜𑍍𑌯𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾[illegible] 𑌕𑌾𑌯𑌶𑍍 (𑌕𑌾𑌯𑌃)
𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌾𑌸𑌰𑌮𑍍 ॥

-(𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌶𑍇𑌖𑌰𑌃, 𑌶𑌿𑌵𑌾𑌰𑍍𑌚𑌨𑌵𑌿𑌧𑌿, 𑌶𑍍𑌲𑍋𑌕𑌃 - 106)
𑌪𑍃𑌷𑍍𑌠-33

9. 𑌸𑌮𑍍𑌪𑍍𑌰𑌦𑌾𑌯[illegible]
𑌸𑌂𑌹𑌿𑌤𑍇𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ।
(𑌕𑍍𑌰𑌿𑌯𑌾-𑌕𑍍𑌰𑌮-𑌦𑍍𑌯𑍋𑌤𑌿𑌕𑌾, 𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾, 𑌪𑍍𑌰𑌹𑌾
𑌪𑍃𑌷𑍍𑌠 - 15)




# புத்தக விவரணம்

*(கட்டுரைகளில் கையாளப்பட்ட சிலவற்றின் குறிப்புகள்)*

| புத்தகங்களின் பெயர்கள் | வெளியீடு | இடம் | வருடம் |
|---|---|---|---|
| அமரகோசம் | சௌகம்பா – சம்ஸ்க்ருத சீரீஸ் ஆபீஸ் | வாரணசி | 1984 |
| அஜிதாகமம் (முதல் பாகம்) | ப்ரெஞ்ச் இன்ஸ்டிட்யூட் ஆஃப் இந்தோலஜி | பாண்டி | 1964 |
| உத்தரகாரணாகமம் | கொ. ஷண்முக சுந்தர முதலியார் | சென்னை | கலி 5003 |
| க்ரியா க்ரம த்யோதிகா (ஸப்ரபா) | ஸ்ரீமதம்பலவநாவல ஞானசம்பந்த பராசக்தி ஸ்வாமி | சிதம்பரம் | 1927 |
| காமிகாகமம் (உத்தரபாகம்) | தென்னிந்திய அர்ச்சக சங்கம் | சென்னை | 1988 |
| குமாரதந்த்ரீம் | தென்னிந்திய அர்ச்சக சங்கம் | சென்னை | 1974 |
| தைத்திரீய மந்த்ரகோசம் முதல் பாகம் | ஸ்ரீஇராமக்ருஷ்ண மடம் | சென்னை | 1980 |
| தாதுபாடம் | மோதிலால் பநாரஸீதாஸ் | டெல்லி | 1984 |
| நித்ய பூஜா லக்ஷண ஸங்க்ரஹம் | தருமபுர ஆதீனம் | தருமபுரம் | 1951 |
| நித்யார்சனாவிதி (காரணாகமம்) | R. இராஜலிங்க குருக்கள் | திருப்பூர் | 1969 |
| பூர்வகாரணாகமம் | கொ. ஷண்முக சுந்தர முதலியார் | சென்னை | கலி 5001 |
| மதங்க பாரமேச்வராகமம் | ப்ரெஞ்ச் இன்ஸ்டிட்யூட் ஆஃப் இந்தோலஜி | பாண்டி | 1977 |
| மஹந்–ந்யாஸம் ஸஸ்வரம் | வைதீகவர்தனீ ப்ரஸ் | கும்ப–கோணம் | 1992 |

| | | | |
|---|---|---|---|
| ருத்ராத்யாயம் | ஆநந்தாச்ரம ஸம்ஸ்க்ருத க்ரந்தாவளி | பூணா | 1976 |
| சிவமஹோத்ஸவ ஸங்க்ரஹம் | சுந்திரமூர்த்தி வெளியீடு | திருச்செந்தூர் | 1960 |
| சிவார்ச்சனா சந்த்ரிகா | சிவாகம சித்தாந்த பரிபாலந சங்கம் | தேவக்-கோட்டை | 1922 |
| சிவப்ப்ரதிஷ்டா விதி | தென்னிந்திய அர்ச்சகர் அஸோஸியேஷன் | சென்னை | 1964 |
| சைவ பூஷணம் | சிவாகம சித்தாந்த பரிபாலந சங்கம் | தேவக்-கோட்டை | - |
| ஸ்தோத்ர சமுச்சயம் – பாகம் 1 | அடையாறு லைப்ரேரி | சென்னை | 1969 |
| ஸார்த்த-த்ரிசதி-காலோத்தரம் | ஃப்ரெஞ்ச் இன்ஸ்டிட்யூட் ஆஃப் இந்தோலஜி | பாண்டி | 1979 |
| ஸித்தாந்த சேகரம் | K. சீதாராம ஸோமயாஜி | மைசூர் | 1971 |
| ஸுப்ரபேதாகமம் | கொ. ஷண்முக சுந்தர முதலியார் | சென்னை | கலி 5030 |
| ஸூர்ய ஸித்தாந்தம் | சௌகம்பா ஸம்ஸ்க்ருத ஸம்ஸ்தானம் | வாராணசி | 1995 |
| ஸோம-சம்பு-பத்ததி | சிவாகம சித்தாந்த பரிபாலந சங்கம் | தேவக்-கோட்டை | 1931 |